# for that millionaire look

Century's **Cosy-Cot** cotton SHIRTINGS with Rich Woollen Feel

Century for 100% cotton textiles

CENTURIZED PRESHRUNK FABRIC

THE **CENTURY** SPG. & MFG. CO. LTD., BOMBAY 25 DD



For Fashion Fabrics choose

*Century Shirtings!*

NPS-CM 16



பசியைப் பெருக்குவதோடு நின்றுவிடும் எந்த டானிக்கும் பாதிவேலையைத்தான் செய்யும்

*

## இன்க்ரிமின் பெறுவீர்..
## உண்ணும் மிகையான உணவை
## ஓங்கிய வளர்ச்சியாக மாற்றும்

*

**சேருவீர் இன்க்ரிமின் இனத்தோடு...**
**வளர்ச்சிக்கான பசியைப் பெறுவீர் வளமுடனே!**

பசியைப் பெருக்குவதோடு மட்டுமின்றி, உண்ணும் மிகையான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றுகிறது இன்க்ரிமின் டானிக். காரணம், உங்கள் குழந்தை சாப்பிடும் புரத சத்துக்களை மேம்படப் பயன்படுத்திக்கொள்ளும் அதிமுக்கியமான அமினோ அமிலம் அதில் அடங்கியுள்ளது.

பெரிய குழந்தைகளுக்கு இரும்புச்சத்து அடங்கிய இன்க்ரிமின் ஸிரப் — 175 மி.லி & 57 மி.லி. இளங் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ் — 10 மி.லி.




# * இன்க்ரிமின்
டானிக்

* அமெரிக்கன் ஸையனமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

Lederle

எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன.
லின்டாஸ்-INC. 21-140 TH

# கல்கி

## பொருளடக்கம்



பரிதாபி ஆனி, 5 — ஜூன் 18, 1972



மேலட்டை: பூனை வியக்கும் பூனை !
வண்ணப்படம்: ரவீந்திர பல்லா

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |

# DIAMOND®

## ◇® Industrial Chain

## HAS LIFE-LONG STRENGTH IN EVERY LINK!

**When even one weak link can ruin the whole Chain, wouldn't you rather go for the Chain with quality & strength in *every* link? That's DIAMOND.**

**DIAMOND is the *only* chain in India with *formed* rollers. And that ensures resistance to impact, greater endurance and longer life.**

What makes DIAMOND CHAIN unique?

- Bevelled link plates
- Side-mashed pins
- Special hot-bath lubrication to let lubricant penetrate every part of the chain
- 'Proof-loading' to ensure there's no initial stretch

A DIAMOND CHAIN, TOO, IS FOR EVER!

® Both the Word & Device of Diamond are Registered Trade Marks of Diamond Chain Co., U.S.A. Made in India by TI Diamond Chain Ltd., Madras-1, Assignees of the Registered Trade Marks

Manufactured by
**TI DIAMOND CHAIN LTD., MADRAS-1**
Works: Ambattur, Madras-53

*A TI subsidiary*

Distributors:
**T.I. & M. Sales Ltd.**

| Madras | Bombay | Calcutta | New Delhi |
|---|---|---|---|
| P. Box 1960 | P. Box 1308 | P. Box 9151 | P. Box 453 |




FDSTID-[illegible]

**கல்கி** மலர் 31 இதழ் 47



தமிழ்த் திருநாடு தன்னைப்பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
-- பாரதியார்

# இந்தியா-பாகிஸ்தான் தலைவர்களின் ஆலோசனைக் கூட்டம்

**ராஜாஜி**

இந்தியா-பாகிஸ்தான் தலைவர்களின் ஆலோசனைக் கூட்டத்தில் நமது பகைமைகள் முற்றிலும் மறைந்து, யுத்தத்தைப் பற்றிய பேச்சும் எண்ணமும் இனி எழாதவாறு செய்ய வேண்டும். இரு நாடுகளும் பூரணமாக மனப்பூர்வமாக ஒத்துழைக்க வழிகாண வேண்டும். இவ்வாறு செய்யாவிடில் இரு நாடுகளுமே இன்சால்வென்ட் நிலைமையில் சிக்கித் தவிப்பதைத் தவிர்க்க முடியாமற் போகும்.

ராஜநீதி நிபுணர் என்ற முறையில் பூட்டோ அவர்களும் நம்மைப் போலவே நிரந்தர சமாதானத்தை விரும்புகிறார் என்பது நிச்சயம். ஆயினும் பாகிஸ்தானில் அவரை எதிர்க்கும் போர் வெறியர்களைச் சமாளிப்பதற்காக அவர் யுத்தப் பிரியராகத் தம்மைக் காட்டிக் கொள்ள வேண்டியதாகிறது.

இந்தியாவும் பாகிஸ்தானும் நிரந்தர சமாதானத்தையே விரும்புகின்றன. இதற்குப் பெருந் தடையாக இருப்பது காச்மீரப் பிரச்னையே ஆகும். இது குறித்து என் அந்தரங்கபூர்வமான யோசனையைத் தெரிவிக்கிறேன்: காச்மீரில் ஒரு பாகம் பாகிஸ்தானைச் சேர்ந்ததாகவும் மிகுதி பாகம் இந்தியாவுக்குச் சேர்ந்ததாகவும் இருக்கிற தற்கால நிலைமையை உடன்படிக்கைப்படி உச்ச கட்டப் பேச்சுக்களின் முடிவாகத் தீர்மான நிலையாக இரு நாட்டினரும் ஒப்புக்கொள்ள வேண்டும். அதாவது, காச்மீரத்தில் போர்நிறுத்தக் கோட்டுக்கு இப்பால் இந்தியாவின் பக்கத்திலுள்ள பகுதிகள் இந்தியாவைச் சேர்ந்ததென்றும், அக்கோட்டுக்கு அப்பால் பாகிஸ்தான் பக்கமுள்ள பகுதிகள் பாகிஸ்தானைச் சேர்ந்தவை என்றும் முடிந்த முடிவாக நிர்ணயித்து விட வேண்டும். இதனால் பாகிஸ்தானுக்கு இந்தியாவோ, அல்லது இந்தியாவுக்குப் பாகிஸ்தானோ எந்தப் புதுப் பிரதேசத்தையும் தந்து விடவில்லை என்பது உண்மை. அதாவது நில அடிப்படையில் எவருக்கும் லாபம் இல்லைதான். ஆனால் பாகிஸ்தானும் இந்தியாவும் இதன் மூலம் பெறுகிற நிரந்தர, பூரண நட்பு மகத்தான லாபமாகும். அண்டைத் தேசங்கள் பொருளாதாரத்திலும் அரசியலிலும் ஒத்துழைப்புக் காண்பது விலைமதிக்க வொண்ணாத லாபமாகும்.

மேலே சொல்லியுள்ள யோசனை இரு தரப்பாருக்கும் ஏற்கவில்லையாகில், காச்மீரத்தில் வாக்கெடுப்பு நடத்துவதே சிலாக்கியமாகும். தைரியத்துடன் இந்தச் சவாலை ஏற்று நடத்த வேண்டும். வாக்கெடுப்பு நடத்துவது பற்றி நாம் பாகிஸ்தானுடைய சம்மதம் பெற வேண்டும் என்பதே இல்லை. இந்தியா தன்னளவில் காச்மீர மக்களுக்கு முன்பு தந்த வாக்கெடுப்பு வாக்குறுதியைத் தானாகவே இப்போது நிறைவேற்றலாம்! பாகிஸ்தானின் சம்மதம் கேட்காமலே இதைச் செய்ய இந்தியாவுக்கு உரிமை உண்டு.

இந்திய மக்களின் சராசரி வருமானத்துக்குச் சற்றும் பொருந்தாத விதத்தில் அரசாங்கச் செலவு அதிகரித்து வருகிறது. அண்டை நாட்டின் ஆக்கிரமிப்புப் பயம் உள்ளவரையில் இந்தச் செலவு குறையாது. அரசாங்கத்தின் இந்தப் பெருஞ் செலவே தில்லியில் சர்வாதிகாரம் வேரூன்றுவதற்கு ஒரு முக்கியமான காரணமாகும். இந்திய மக்கள் கம்யூனிஸ நாட்டு மக்களைப் போல உரிமைகள் இழந்து அடிமைகளாகிப் போகாமல் இருக்க வேண்டுமாயின், அரசாங்கச் செலவைக் குறைப்பது அத்தியாவசியமாகும். ஆனபடியால் இந்த அடிப்படையிலும் பாகிஸ்தானும், அதனுடைய அந்நியக் கூட்டாளிகளும் படை எடுக்கும் வாய்ப்பைத் தவிர்க்க வேண்டியது

முக்கியம். இதற்குக் காச்மீரப் பிரச்னையைப் பைசல் செய்ய வேண்டியது அவசியம்.

மவுண்ட்பேட்டன் பிரபு கவர்னர் ஜெனரலாக இருந்தபோது இந்தியா காச்மீரத்தில் வாக்கெடுப்புச் செய்வதாகத் தந்த வாக்குறுதியை நடத்திக் காட்ட இப்போது வாய்ப்பு வந்துள்ளது. இதற்குப் பயப்பட வேண்டியதில்லை. இப்போது பாகிஸ்தான் உள்ள நிலையைக் கருத்தில் கொண்டால் காச்மீர மக்கள் பாகிஸ்தானுடன் தங்களைப் பிணைத்துக் கொள்ள விரும்பவே மாட்டார்கள் என்று பிரத்யட்சக் கண்ணோட்டம் கொண்ட எவரும் உணரலாம்.

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே நிரந்தர சமாதானம் ஏற்படுவதை நாம் மனமார விரும்பினால் வாக்கெடுப்புக்குப் பின் முடிவு என்ன ஆகுமோ என்ற சந்தேகம் ஓரளவு இருந்தபோதிலும் அதைத் தைரியமாக மேற்கொள்ள வேண்டும். காச்மீர விவகாரத்துக்கு முடிவு கண்டு விட்டால், அதன் பின் சமாதானம் கண்டு இந்தியாவையும் பாகிஸ்தானையும் பொருளாதார விபத்திலிருந்து காப்பது எளிதாகும்.

பாகிஸ்தான் தற்போது பலவீனமடைந்திருப்பதாலேயே அதனுடன் சேர்ந்திருக்கக் காச்மீர மக்கள் வாக்குத் தர மாட்டார்கள் என்பதைச் சந்தர்ப்பவாதமாக எண்ணக் கூடாது. பாகிஸ்தான் பலவீன மடைந்ததற்கு அதன் தலைவர்களே காரணமாதலால் இந்தியாவைக் குறை கூறுவதற்கில்லை. இப்போது நாம் வாக்கெடுப்புச் சவாலை ஏற்காமல் தள்ளிப் போட்டு அவகாசம் தந்தாலும் கூட, பாகிஸ்தான் செல்வாக்குப் பெறுவதில் வெகுவாக முன்னேறுகிற வாய்ப்பே இல்லை என்பது நிச்சயம். ஆனபடியால் இது சந்தர்ப்பவாதமல்ல. மகத்தானதொரு வாய்ப்புக் கிடைத்திருப்பதை நழுவ விடாமல் வாக்கெடுப்பு யோசனையை அமல் செய்ய முனைய வேண்டும்.

நான் கூறியுள்ள அடிப்படையிலோ அல்லது வேறு விதத்திலோ இப்போதே நம்மிரு நாடுகளிடை சமாதானத்தையும் ஒத்துழைப்பையும் ஏற்படுத்தாவிடில், இரு நாடுகளிலும் யதேச்சாதிகாரம் வலுப்பெற்று, தென் ஆசிய உபகண்டத்தில் ஜனநாயகம் அடியோடு பட்டுப் போக வேண்டியதுதான்.




இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையில், சந்தேகமும் துவேஷமும் மறைந்து, நட்பும், ஒத்துழைப்பும் விரைவிலேயே ஏற்பட வேண்டும். இது எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரம் ஏற்படும் என்பது, அறிவுள்ள தலைவர்கள் பிறருக்கும் விஷயங்களை விளங்கவைத்து மேல் நடவடிக்கை எடுப்பதைப் பொறுத்ததே யாகும். நல்ல விஷயங்களை விரைவில் காரியமாக்குவதால் எத்தனையோ மனக் கசப்பையும் கஷ்டத்தையும் நஷ்டத்தையும் தவிர்க்கலாம். என் யோசனையை ஏற்றுக் கொள்வதையும் ஏற்றுக் கொள்ளாததையும் இரண்டையும் சமமாகப் பாவித்து இதை விடுக்கிறபடி என் ஆலோசனையைச் சொல்லுகிறேன். என் கடமையைச் செய்துவிட்டேன். 'ரகுபதி ராகவ' பஜனையில் ஸ்ரீ வினோபா பாவே பாடிய படி அல்லா என்றும் ஈச்வரன் என்றும் நாமமிட்டு எந்த பகவானுக்குப் பிரார்த்தனை செலுத்துகிறோமோ அவன் ஆலோசனைக் கூட்டத்தில் பங்கு கொள்ளும் அனைவருக்கும் நல்லறிவு அருள்வானாக!



## ஆனந்தமயீ ஜயந்தி

பிரம்மானுபவத்திலேயே அனவரதமும் மூழ்கிக்கொண்டு அடியார்களுக்குள் அமைதி ஆனந்தத்தை நிரப்பிவரும் அன்னை ஆனந்தமயீ தேவியின் ஜன்மதினம் 'கல்கி'ப் பூங்காவில் மே 31-ந் தேதி மாலை பக்தி மணம் கமழக் கொண்டாடப்பட்டது. ஆனந்தமயீ மாதாவின் அன்பு தவழும் உருவப்படத்தைப் பாங்குற அலங்கரித்து வைத்து, பஜனையும், பூஜையும், வேதகோஷமும் நடைபெற்றன. ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் அன்னையை எண்ணி நெகிழ்ந்து, நெக்குருகி திவ்விய கானம் செய்தார். கீர்த்தனங்கள், ஸ்லோகங்களோடு நாமாவளிகளையும் அவர் ஸ்ரீமதி ராதா விசுவநாதனுடன் இசைக்க, கூடியிருந்த ஏராளமான அடியார்களும் பஜனையில் கலந்து பாடியது பேரனுபவமா யிருந்தது. □

# ராஜாஜியின் கருத்துக்கள்

லோகாயத ஆசைகளை விட்டொழித்துவிட வேண்டும் என்று எல்லா மதங்களையும் சேர்ந்த முனிவர்கள் அறிவுரை வழங்கியுள்ளார்கள். ஆனால் பற்றுக்களிலிருந்து கழன்று கொள்வது எவ்வளவு கடினம் என்பதை உணர்ந்த வள்ளுவர் வழிகாட்டுகிறார்:

**பற்றுக பற்றற்றான் பற்றினை, அப்பற்றைப்<br>பற்றுக பற்று விடற்கு**

ஆண்டவனிடம் ஒன்றிவிடு. அந்தப் பற்று, மற்ற லோகாயத பற்றுக்களிலிருந்து நீ விடுதலை பெற உனக்கு உதவும்.

★

ஜனாதிபதி புட்டோ இப்போதெல்லாம் சொல்வனவற்றையும் செய்வனவற்றையும் பற்றிப் படிக்கும்போது எனக்கு மகிழ்ச்சி ஏற்படவில்லை. இப்போதுள்ளதைவிடக் குறைந்த சாதுர்யமும் அதிக சத்தியசீலமும் கொண்டவராய் அவர் இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன். சாதுர்யம் ஒரு விஷ வட்டத்தை உருவாக்குகிறது. எதிர்த் தரப்பினரையும் இதே அளவுக்குச் சாதுரியமாக நடந்து கொள்ளுமாறு தூண்டி விடுகிறது; அதே சமயத்தில் அவர்களை நம்பத் தகாதவர்களாகவும் ஆக்குகிறது. சாதுர்யமாக வாதாடுவதால் எதையும் சாதிக்க முடியாது. மனப் பூர்வமான நல்லெண்ணத்துடன் செயல்பட்டால் எதையும் சாதிக்க முடியும். இந்தியாவுக்கு எதிராகவும், தெற்கு ஆசியாவில் அமைதி நிலவுவதற்கு எதிராகவும் அமெரிக்கா ஏற்படுத்திய சிக்கல்களில் புட்டோ அகப்பட்டுக் கொண்டு விட்டார் என்றே நான் அஞ்சுகிறேன்.

சத்தியமே வெல்லும் என்று உபநிஷத முனிவர் சொன்னார். சத்தியம் என்பது மனப் பூர்வமான நல்லெண்ணத்துடன் செயல்படுவதைக் குறிக்கும். சாதுர்யம் சத்தியமல்ல.

★

ஆக்டன் என்பவர் அதிகார போதையும் மதியைக் கெடுக்கும்; ஊழலை விளைவிக்கும் என்று எச்சரித்தார். அதிகார பலம் உருவாக்கும் ஊழல்களுள் மிக மோசமானது, மேலும் மேலும் அதிகாரங்கள் வேண்டும் — நிரந்தரமாக அந்த அதிகாரம் நம்மிடம் இருக்க வேண்டும் என்ற ஆசையை விளைவிப்பது ஆகும்.

சுகமளிப்பவை எல்லாம் நல்லவையல்ல. நல்லவைகளுக்கும் சுகம் மட்டும் அளிப்பனவற்றுக்கும் இடையில் நம் மனத்துக்குள்ளே சதா சர்வகாலமும் ஒரு பனிப்போர் நடந்து கொண்டிருப்பதாக உபநிஷதங்கள் கூறுகின்றன. கயிறு இழுப்புப் போட்டி போன்ற

இந்தப் போராட்டத்தில் அதிதமான ஆசை நல்லறிவை வெற்றிகொண்டு விடுகிறது. இதுவே சர்வாதிகாரத்துக்கு இட்டுச் செல்கிறது. இதனால்தான் அறிஞர்களான நமது சுதந்திர பிதாக்கள் ஆட்சி பீடத்துக்கு வருவோரின் அதிகாரங்களுக்குச் சில வரையறைகளை ஏற்படுத்தினார்கள். பிரஜைகளின் சுதந்திரங்கள், நீதிமன்றங்களின் சுதந்திரம், பதவியிலுள்ளோர் தங்கள் அதிகாரங்களை எந்த அளவுக்குச் செயல்படுத்தலாம் என்பதை தீர்மானிப்பதில் ஸுப்ரீம் கோர்ட்டுக்கு உள்ள உரிமை ஆகியவையெல்லாம் 1950ல் வகுக்கப்பட்ட அரசியல் சாஸனத்தில் விரிவாக உறுதி கூறப்பட்டுள்ளன.

★

புது தில்லியிலுள்ள பத்திரிகை நிருபர்கள் மத்திய மந்திரி சபையில் மாற்றங்கள் நிகழும் என்று ஊகிக்கின்றனர். ஸ்ரீமதி இந்திரா காந்தி ஒரு சர்வாதிகாரியாக இயங்குகிற வரையில் மந்திரி சபைக்கு என்ன நேர்ந்தால் தான் என்ன? இதை எல்லாருமே புரிந்து கொண்டிருக்கின்றனர்.

★

கோவை விவசாயிகள் அமைதியை முன்விட்டு ஒருதலைப்பட்ச நடவடிக்கை எடுத்திருப்பதை அந்நகரிலிருந்து வரும் செய்திகள் சுட்டுகின்றன. தமிழக முதல்வர் இந்தப் போர்நிறுத்தத்தைச் சாதகமாக்கிக் கொண்டு இவ்வார இறுதிக்குள் யுத்தத்துக்கு முடிவு காண்பார் என்று மனப்பூர்வமாக எதிர்பார்க்கிறேன். வேறு எதுவும் ஸ்ரீ கருணாநிதியின் மனத்தைக் கவராவிட்டாலும் விவசாயிகள் காட்டியுள்ள உறுதி பாராட்டுக்குரியது என்பதையேனும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

★

தமிழ் நாட்டு முதல்வர் பற்றி மத்திய துப்பறியும் இலாக்கா (CBI) தயாரித்திருக்கும் குறிப்புக்கள் வெளியிடக்கூடிய விஷயங்களிலிருந்து ஸ்ரீ கருணாநிதி தம்மைத் தற்காத்துக் கொள்ள முடியாது என்ற பலமான சந்தேகம் மக்களிடையே பரவியிருக்கிறது. இச்சந்தேகம் ஆதாரமற்றது என்று உணர்த்துவதற்காகவாவது துப்பறியும் இலாக்கா தயாரித்துள்ள குறிப்புக்களைச் சீக்கிரமே பிரசுரத்துக்குத் தந்துவிட வேண்டும்.

★

அரசியல் மேதை ஸ்ரீ வி. விஜயராகவாச்சாரியாரின் மனைவி ஜூன் 8ந் தேதி தமது தொண்ணூற்று நான்காவது வயதில் காலமானார். வழக்கறிஞர் தொழில் ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் எனது குருவான ஸ்ரீ விஜயராகவாச்சாரியார் அவர்களைக் கடைசித் தடவையாக நான் சந்தித்தபோது அவர் மரணப் படுக்கையில் இருந்தார். ஆனபோதிலும் அவர் எழுந்திருந்து, வெற்றிலை பாக்கு — புஷ்பத்துடன்கூடிய தட்டை வேத மந்திரங்களைக் கூறியபடியே என்னிடம் தந்து ஆசீர்வதித்தார். இந்தியாவில் பெரும் புகழ் கொண்ட அரசியல் தலைவர்கள் பலர் இருந்திருக்கிறார்கள். ஆனால் ஸ்ரீ விஜயராகவாச்சாரியாரைக் காட்டிலும் அரசியலில் விஷய ஞானமுள்ள ஒருவரோ அல்லது தைரியசாலியான ஒருவரோ இருந்ததில்லை.

சேலத்தில் வழக்குரைஞர் தொழிலை எழுபத்திரண்டு வருஷங்களுக்கு முன்னால் நான் மேற்கொண்டபோது முதல் நாளன்றே அவரிடமிருந்து ஒரு விஷயத்தைக் கற்றுக் கொண்டேன். வழக்கறிஞர்களின் பணி, தங்கள் கட்சிக்காரரின் வழக்கை நடத்துவது மட்டுமல்ல; அயல்நாட்டினரின் ஆட்சியில் இருக்கும் நம் தேசத்தின் நலனையும் கவனிக்க வேண்டும் என்பதுதான் அந்த முதல் பாடம். சுயராஜ்யம் பெற காந்திஜி வகுத்த திட்டத்தை ஏற்றுக் கொண்ட காங்கிரஸ் மாநாட்டுக்கு அவர் தலைமை வகித்தார். 1907ல் சூரத் காங்கிரஸின்போது காங்கிரஸ் பிளவுபட்டதும் மிதவாதிகள் கட்சியில் சேர அவர் மறுத்துவிட்டார். தேசியவாதிகள் பக்கமே இருந்தார்.



திருவேற்காடு ஸ்ரீயோக கருமாரி அம்மன் அதிஷ்டான மஹா கும்பாபிஷேகத்தை மே 17ந் தேதி புதன்கிழமை காலை 6-30 மணிக்குத் தருமை ஆதீன சிவாச்சாரியார் அவர்கள் மிகச் சிறப்பாக நடத்தி வைத்தார். இந்த வரப் பிரசித்திபெற்ற ஆலயத்தின் மண்டலாபிஷேகமும் மிக விமரிசையாக நிறைவேற ஏற்பாடுகள் நடக்கின்றன. தேவி கருமாரி அம்மனின் பக்தர்கள், இந்தத் தெய்வ கைங்கரியத்தில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் தன் கொடைகளைக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பி வைக்கலாம் :

ஸ்ரீயோக கருமாரி அம்மன் அதிஷ்டானம், திருவேற்காடு,
சென்னை — 56.





# தமிழ் நாட்டின் பெருமை

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

உலகத்தில் இருக்கிற கோயில்களில் பாதிக்கு மேல் இந்தியாவில்தான் இருக்கின்றன. இதிலும் பாதிக்கு மேற்பட்ட ஆலயங்கள் தமிழ் நாட்டில்தான் இருக்கின்றன.

உலகத்தில் இருக்கிற பக்தி நூல்களில் பாதிக்கு மேல் இந்தியாவில்தான் இருக்கின்றன. இதில் பாதிக்கு மேற்பட்ட நூல்கள் தமிழ் நாட்டைச் சேர்ந்தவையே. கும்பகோணத்தைச் சுற்றியுள்ள காவிரிப் பிரதேசத்தில் கிடைத்த ஏட்டுச் சுவடிகள் உலகத்திலுள்ள சாஸ்திரங்களில் பாதிக்கு மேற்பட்டவை என்று அறியும்போது நமக்குப் பெருமையாக இருக்கிறது.

இதோடுகூடத் தமிழ் நாட்டுக்கு இன்னொரு தனிப் பெருமை உண்டு. சாதாரணமாக ஒரு குறிப்பிட்ட மொழியும், ஒரு விசேஷமான கலாசாரமும் உள்ள ஒரு பிரதேசத்தில் பிற மொழியினரும், பிற கலாசாரத்தினரும் குடியேறினால் நாளடைவில் அவர்கள் தங்கள் தனி வழக்கங்களையும் பாஷைகளையும் இழந்து அந்தப் பிரதேசத்தின் மொழியையே பேச ஆரம்பித்து விடுவார்கள். அங்குள்ள நாகரிகத்தையே பின்பற்ற ஆரம்பித்து விடுவார்கள். உலக நாடுகளின் சரித்திரத்தைப் பார்க்கும்போது இந்த உண்மை நிதரிசனமாகிறது. தமிழ்நாட்டிலிருந்து பாரதத்தின் மற்றப்பகுதிகளில் சென்று குடியேறியவர்களைப் பிரதேசரீதியில் ஐந்து பிரிவாகப் பிரித்து, 'பஞ்ச திராவிடர்கள்' என்பார்கள். இப்போதுகூட வடநாட்டுக்காரர்கள் பலர் 'த்ரவிட்' (Dravid) என்று குலப் பெயர் போட்டுக் கொள்வதைப் பார்த்திருப்பீர்கள். வெளி மாகாணங்களில் உள்ள இந்தத் 'திராவிடர்'களுக்குத் தமிழ் மொழியே அடியோடு தெரியவில்லை. நீண்ட காலமாக ஒரு பகுதியில் வசிக்கும் பிற சீமையைச் சேர்ந்த மைனாரிட்டிக்காரர்கள் தங்கள் பாஷையை மறந்துவிடுகிறார்கள் என்பதற்கு இது ஓர் உதாரணம்.

ஆனால் தமிழ்நாடு ஒன்றுமட்டும் இதற்கு விலக்காக இருக்கிறது. தமிழ்நாட்டில் மகாராஷ்டிரர்கள், ஆந்திரர்கள், கன்னடியர்கள், குஜராத்திகள், சௌராஷ்டிரர்கள் முதலிய பல சமுதாயத்தினர் எத்தனையோ பரம்பரைகளாக வாழ்ந்து வருகிறார்கள். ஆனால் அவர்கள் தங்கள் பாஷைகளையே பேசி வருகிறார்கள். தங்களது பழக்க வழக்கங்களையே பின்பற்றி வருகிறார்கள். ஆதிகாலத்திலிருந்து திராவிட தேசமானது இவ்வாறு அந்நிய தேசத்திலிருந்தும் பாரதத்தின் பிற பகுதிகளிலிருந்தும் வந்தவர்களுக்கெல்லாம் இடம் தந்து, அவரவரையும் அவரவரது பாஷை, சம்பிரதாயம் இவைகளிலேயே நிலைப்படுத்தியிருக்கிறது. தமிழ்நாடு ஒரு 'ரிஃப்ரிஜிரேடர்' (குளிர்பதனப் பெட்டி) போல் எல்லா பாஷைகளையும் எல்லா நாகரிகங்களையும் கெடாமல் குளிர்ச்சியுடன் காத்துத் தந்து வந்திருக்கிறது. குளிர் சாதனப் பெட்டியில் வைத்த பழம் போல் தியாகராஜரின் தெலுங்குக் கிருதிகள் இந்த மண்ணில் பிறந்தன. இப்படியே பல பாஷைக் கிரந்தங்கள், பல சித்தாந்தங்கள் இங்கு உருவாயின. மற்றவை அனைத்துக்கும் தன்னை இரையாக விட்டுக் கொண்டு, தன்னை மற்றவர்மீது திணித்து நிர்ப்பந்திக்காமல் இருக்கிற ஒரு தனிப் பண்பு திராவிட தேசத்துக்கு இருந்து வந்திருக்கிறது.

தொன்றுதொட்டு வேத நெறியின் வீடாக இருந்திருப்பது தமிழகமே. மனித குலத்தின் முதல்வரான மநு, வைகைக்கருகேயுள்ள கிருதமாலாக் கரையில் வசித்ததாகவே பாகவதம் கூறுகிறது. வேத தர்மம் இங்கேதான் பிறந்தது. உலகத்திலேயே ஈடு இணையில்லாத பக்திச் செல்வத்தைத் தந்த ஆழ்வார்களும், நாயன்மார்களும், பட்டினத்தார், தாயுமானவர், திருவள்ளுவர் போன்றவர்களும் எங்கு பார்த்தாலும் திராவிட நாட்டில் வேதத்தின் பெருமையைப் பேசுகிறார்கள். சோழ, பாண்டிய, பல்லவ மன்னர்கள் வேத பாடசாலைகளுக்கும் வேத வித்துக்களுக்கும் தாங்கள் செய்த சாஸனங்களைக் கல்வெட்டுக்களில் பொறித்துப் பூரிப்படைந்திருக்கிறார்கள். சென்ற நூற்றாண்டைச் சேர்ந்த கிறிஸ்துவப் புலவர் ஸ்ரீ வேதநாயகம் பிள்ளை கூட தமிழ்நாட்டில் 'பிரம்மாலயங்கள்' (வேத பாடசாலைகள்) நிறைந்திருப்பதைப் பெருமையோடு கூறியிருக்கிறார். 'வேதம் நிறைந்த தமிழ்நாடு' என்று பாரதியார் பாடியது உங்களுக்குத் தெரியும்.

இப்படி வேத தர்மமும் பாரமார்த்திகமும் தோய்ந்து கிடக்கும் தமிழ்நாட்டில் பண்டைக் காலத்திலிருந்து அவ்வப்போது அவைதிகமும் நாஸ்திகமும் தலைகாட்டி வந்ததும் உண்டு. ஆனால் இத்தகைய நாஸ்திக ஆட்டங்கள் ஏற்பட்ட ஒவ்வொரு சமயத்திலும், மக்கள் விழித்துக்கொண்டு, தங்களது தெய்வ பக்திக்கும், வைதிக நம்பிக்கைக்கும் கூர் தீட்டிக் கொண்டதையே சரித்திரம் சொல்கிறது.

# 8. சீதாவின் பதில்




லலிதாவின் கடிதம் சீதாவின் உள்ளத்தில் பலவித உணர்ச்சிகளை உண்டாக்கியது. லலிதாவின் புக்கக வாழ்க்கையைக் குறித்து அநுதாபம் ஏற்பட்டது. அதே சமயத்தில் லலிதாவின் நிலைமையுடன் தன்னுடைய நிலைமையை ஒப்பிட்டுப் பார்த்தபோது அவளுடைய அந்தரங்கத்தில் ஒருவித மகிழ்ச்சியும் உண்டாயிற்று. ''என்னதான் இருந்தாலும் இவள் இவ்வளவு குறை சொல்லிப் புலம்பக் கூடாது!'' என்று ஒரு பக்கத்தில் தோன்றியது. உடனே, ''பாவம்! வேறு யாரிடத்தில் சொல்லிக் கொள்வாள்? அவள் அம்மாவோ வெறும் பைத்தியம்!'' என்ற எண்ணமும் தோன்றியது. ''அம்மம்மா! எத்தனை நீளம் கடிதம் எழுதுகிறாள்? ஒரு வார்த்தையில் சொல்ல வேண்டியதை ஒன்பது வார்த்தைகளில் சொல்கிறாளே?'' என்று அலுத்துக் கொண்டாள். கடைசியில் ஒருவாறு கடிதத்தைப் படித்து முடித்த பிறகு பின்வரும் பதிலை எழுதினாள்:

''என் பிரியமுள்ள தோழி லலிதாவுக்கு: உன்னுடைய கடிதம் கிடைத்தது. அதைப் படித்தபோது கொஞ்சம் வருத்தம் உண்டாயிற்று. உன் பேரில் கோபமாயும் இருந்தது. இவ்வளவு விஷயங்களையும் உன் மனத்துக்குள் இத்தனை நாட்களும் மூடி வைத்துக் கொண்டிருந்தாயல்லவா? இதுதானா உண்மையான சிநேகிதத்துக்கு இலட்சணம்? போனது போகட்டும். இனிமேல் இன்பமோ, துன்பமோ, சுகமோ, துக்கமோ, எதுவாயிருந்தாலும் உடனுக்குடனே எனக்கு நீ விஸ்தாரமாகக் கடிதம் எழுதிவிட வேண்டும். ஒருவருக்கொருவர் சிநேகமாயிருப்பது பின் எதற்காக? சுக துக்கங்களைப் பகிர்ந்து அநுபவிப்பதற்குத்தானல்லவா?

காதல் என்பது கதைகளிலே மட்டும் அல்ல — இந்த உலகத்திலும் உண்டு என்பது நிச்சயம். அதற்கு என்னுடைய வாழ்க்கையே அத்தாட்சி! அடியே! லலிதா! உண்மையில் நான் பாக்கியசாலிதானடி! ஆனால் இந்தப் பாக்கியம் ஒருவிதத்தில் உன்னால்தான் எனக்குக் கிடைத்தது என்பதை நான் ஒருநாளும் மறக்கமாட்டேன். எனக்குப் பதிலாக இன்றைக்கு நீ இங்கே — இந்த அழகான புது தில்லி பங்களாவில் — இருந்திருக்கலாம் என்பதை நினைக்கும்போது என்னமோ பண்ணுகிறது. உனக்கு எப்படி நான் நன்றி செலுத்துவேன்!

என்னுடைய சமாசாரம் இருக்கட்டும். உன்னுடைய புக்ககத்து வாழ்க்கையைப் பற்றி நீ எழுதியிருப்பதைப் படித்து வருத்தம் அடைந்தேன். உலகம் எவ்வளவோ முன்னேற்றமடைந்திருக்கும் போது — நாகரிகம் இவ்வளவாகப் பரவியிருக்கும் காலத்தில் — உன் புக்ககத்து மனிதர்களைப் போன்றவர்களும் இருப்பது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது! உன்னைச் சிறையில் போட்டு அடைத்து வைத்திருப்பது போல் அல்லவா வைத்திருக்கிறார்கள் என்று தெரிகிறது? அதை நினைத்தால் எனக்கு அசாத்தியக் கோபம் வருகிறதடி!

ஆனால் ஒரு விஷயம். உன் கணவன் பட்டாபிராமன் உன்னைச் சினிமாவுக்கு அழைத்துப் போகாததினாலேயே அவனுக்கு உன் பேரில் அபிமானம் இல்லை என்று நினைத்துவிடாதே! இது பட்டிக்காட்டுப் பெண்கள் பேசுகிற பேச்சு. புருஷர்களுக்கு எத்தனையோ சௌகரிய அசௌகரியங்கள் இருக்கும். அதையெல்லாம் கவனித்து நாம்தான் நல்ல மாதிரி நடந்து கொள்ள வேண்டும். நம்முடைய புருஷன் வேறொரு பெண்ணிடம் பேசிவிட்டால் அதனால் குடி முழுகிப் போய்விட்டது என்று நாம் நினைத்துக் கொள்ளக் கூடாது. நாகரிகமே தெரியாத படிப்பற்ற ஸ்திரீகள் தான் அப்படியெல்லாம் சந்தேகப்படுவார்கள்.

உன் மாமியாரைப் பற்றி நீ எழுதியிருப்பதையும் நான் முழுதும் ஒப்புக்கொண்டுவிட முடியாது. எல்லாம்

நாம் நடந்து கொள்வதைப் பொறுத்தது. பிறந்தகத்தை விட்டுப் புக்ககத்துக்குப் போனால் அப்புறம் பிறந்தகத்துப் பாசமே இருக்கக் கூடாது. மாமனார் மாமியார்தான் தாயார் தகப்பனார் என்று எண்ணி நடந்து கொள்ள வேண்டும். என்னுடைய 'ஓர்ப்படி' மாமியாரிடம் இருந்து குடித்தனம் செய்ய முடியாது என்று நினைத்துத்தான் பிறந்த வீட்டுக்குப் புருஷனையும் அழைத்துக் கொண்டு போய் விட்டாள். ஆனால் நான் எப்படி யிருக்கிறேன், பார்! என் மாமியார் என்னிடம் வைத்திருக்கும் அபிமானத்துக்கு அளவே கிடையாது. 'பெற்ற பெண்கூட இவ்வளவு பிரியமா யிருக்க மாட்டாள்' என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருக்கிறார். நீயும் உன் தாயார் தகப்பனாரை அடியோடு மறந்துவிட்டு மாமியாரும் மாமனாருந்தான் பெற்ற தாயும் தகப்பனும் என்று நினைத்து நடந்துகொள்ளு. அப்போது அவர்கள் எப்படி மாறி விடுகிறார்கள், பார்!

சூரியா காங்கிரஸ்க்குப் போய்விட்டுத் திரும்பி வந்துவிட்டான். லலிதா! மிகவும் சந்தோஷமான ஒரு செய்தி. என் அகத்துக்காரருக்குச் சூரியாவை ரொம்பவும் பிடித்துப் போய்விட்டது. இருவரும் அன்னியோன்னிய சிநேகிதர்களாகி விட்டார்கள். ஓயாமல் காங்கிரஸைப் பற்றியும் இங்கிலீஷ் சர்க்காரைப் பற்றியும் பேசிக் கொண்டே யிருக்கிறார்கள். பேச ஆரம்பித்து விட்டால் பேச்சின் சுவாரசியத்தில் சாப்பாட்டைக்கூட மறந்து விடுகிறார்கள். சில சமயம் நான் ஒருத்தி இருப்பதைக்கூட மறந்து விடுகிறார்களடி! எப்படி யிருக்கிறது வேடிக்கை!

சென்ற ஞாயிற்றுக்கிழமை எல்லாருமாக இந்தத் தில்லியிலுள்ள குதுப்மினார் கோட்டை, ஜந்தர்மந்தர் முதலிய இடங்களுக்குப் போய் எல்லாவற்றையும் பார்த்துவிட்டு வந்தோம். சூரியாவும் எங்களுடன் வந்ததுதான் மிகவும் சந்தோஷமா யிருந்தது.

நாளைய இரவு நாங்கள் ஆக்ராவுக்குப் புறப்படப் போகிறோம். சூரியாவும் எங்களுடன் கூட வருகிறான். ஆனால் என் மாமியார் வரவில்லை. குழந்தையைப் பார்த்துக் கொண்டு வீட்டில் இருப்பதாகச் சொல்லிவிட்டார்.

**உ**லகத்தின் ஒன்பது மகா அதிசயங்களில் ஒன்றாகிய தாஜ்மகால் ஆக்ராவில்தான் இருக்கிறது. நீ சரித்திரப் புத்தகத்தில் படித்திருக்கிறாய் அல்லவா? ஷாஜஹான் சக்கரவர்த்தி தன்னுடைய பட்டத்து ராணி மும்தாஜின் ஞாபகார்த்தமாகக் கட்டிய அற்புதக் கட்டடம் தாஜ்மஹால். முக்கியமாக, அதைப் பார்த்துவிட்டு வரத்தான் நாங்கள் போகிறோம்.

ஆக்ராவிலிருந்து ஓர் இரவு ரயில் பிரயாணம் செய்தால் ரஜனிபூர் என்று ஓர் ஊர் இருக்கிறதாம். அது ஒரு சுதேச ராஜாவின் ஊராம். அங்கே ஒரு விஸ்தாரமான ஏரியும் ஏரியின் நடுவில் ஓர் அழகான நீராழி மண்டபமும்





உண்டாம். ஏரிக்கரை ஓரத்தில் ஆயிரம் பதினாயிரக் கணக்கில் வெள்ளை வெளேர் என்ற நிறமுடைய கொக்குகள் வந்து மந்தை மந்தையாய் உட்கார்ந்து விட்டு, அவ்வளவும் சேர்ந்தாற்போல் பறந்து போகுமாம். அதைப் போன்ற அழகான காட்சி உலகத்திலேயே கிடையாதாம். ஆக்ராவிலிருந்து அங்கேயும் போய் வரலாம் என்று இவர் சொல்லிக் கொண்டிருக்கிறார். ஆனால் சூரியா ஆக்ராவிலிருந்து திரும்பி வந்துவிட வேண்டுமென்றும் ஏதோ ஒரு கூட்டம் தனக்கு இருக்கிறதென்றும் சொல்லிக் கொண்டிருக்கிறான். ''கூட்டமும் ஆச்சு! மண்ணாங்கட்டியும் ஆச்சு!'' என்று இவர் நேற்றைக்குச் சூரியாவுடன் சண்டை பிடித்தார்.

சூரியாவை நான் கவனமாகப் பார்த்துக் கொள்கிறேன், லலிதா! அவனைப் பற்றி நீ கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம். சூரியா நம்மிருவருக்கும் செய்திருக்கிற உதவிக்கு நான் அவனுக்கு எவ்வளவு செய்தாலும் தகும். நல்ல சமயம் பார்த்து இவரிடம் சொல்லி அவனுக்கு ஓர் உத்தியோகம் பண்ணி வைக்கச் செய்யலாமென்று எண்ணியிருக்கிறேன். என்னுடைய மாமியாருடைய தங்கை பெண் ஒருத்திக்கு வரன் தேடிக் கொண்டிருக்கிறார்களாம். சூரியாவுக்குப் பண்ணிக் கொள்ளலாம் என்று மாமியார் சொல்கிறார். அந்த மாதிரி நடந்தால் எனக்கு எவ்வளவோ சந்தோஷமாயிருக்கும். சூரியா இங்கேயே குடியும் குடித்தனமுமாய்த் தங்கிவிட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்? அப்போது நீகூடச் சில சமயம் இங்கே வந்து விட்டுப் போவாய் அல்லவா?

பம்பாயில் உன்னை எல்லா இடங்களுக்கும் அழைத்துக் கொண்டு போய்க் காட்டிய நினைவு எனக்கு வருகிறது.

இல்லியிலும் பார்க்க வேண்டிய இடங்களுக்கெல்லாம் உன்னை அழைத்துக் கொண்டு போய்க் காட்டுவது எனக்கு எவ்வளவு சந்தோஷமாயிருக்கும் தெரியுமா?

இதோ இவர், 'வெளியில் உலாவப் போவதற்கு நேரமாகிவிட்டது' என்று அவசரப்படுத்துகிறார். ஆகையால் இந்தக் கடிதத்தை இங்கேயே நிறுத்திக் கொள்கிறேன். ஆக்ராவிலிருந்து திரும்பி வந்த பிறகு மறுபடியும் விவரமான கடிதம் எழுதுகிறேன். இப்படிக்கு,

உன் பிரிய சிநேகிதி, **சீதா**.

குறிப்பு: — நான் இல்லிக்கு வந்த அன்று ரயில்வே ஸ்டேஷனில் ஒரு சிறு சம்பவம் நடந்தது. அதைப் பற்றி என்னமோ ஏதோ என்று எனக்கு ரொம்பவும் கவலையாயிருந்தது. ஆனால் கவலைக்குச் சிறிதும் இடம் இல்லையென்று இப்போது நிச்சயமாகி விட்டது. என்னுடைய அசட்டுத்தனமான சந்தேகத்தைப் பற்றி மறுமுறை நாம் நேரில் சந்திக்கும் போது சொல்கிறேன். அதைக் கேட்டால் நீ விழுந்து விழுந்து சிரிப்பாய் —

**சீதா**.''

## 9. மல்லிகை மாடம்

ரயில் வண்டி ஆக்ராவை நெருங்கிக் கொண்டிருந்த போது, சூரியாவுக்கும் ராகவனுக்கும் விவகாரம் முற்றி அவர்களுடைய குரல் ரயிலின் சத்தத்தையும் மிஞ்சிக் கேட்டது.

''காங்கிரஸை வர வர பிதவாதம் பற்றிக் கொண்டு வருகிறது. மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரி சபைகள் ஏற்பட்டதினால் என்ன மாறுதலைக் கண்டோம்? ஒன்றுமில்லை! கவர்னர் முதல் கிராம முன்சிப் வரையில் முன் போலவே அதிகாரம் செலுத்தி வருகிறார்கள். போலீஸ் கெடுபிடியும் முன்போலவே தான் இருக்கிறது!'' என்று சொன்னான் சூரியா.

'' அது மட்டுமா? ரயில் முன் போலவே ஓடிக் கொண்டிருக்கிறது. தபால்கள் முன் போலவே டெலிவரி ஆகிக் கொண்டிருக்கின்றன. மாஜிஸ்திரேட்டுகள் முன்போலவே திருடர்களைத் தண்டித்து வருகிறார்கள் — இப்படியெல்லாம் புகார் செய்வாய் போலிருக்கிறதே! நல்ல சோஷலிஸ்ட் நீ! பின்னே என்னதான் செய்ய வேண்டும் என்கிறாய்? கவர்னர் முதல் கிராம முன்சிப் வரையில் — போலீஸ்காரர்கள் உள்பட — எல்லா உத்தியோகங்களையும் அதிகாரங்களையும் சட்ட திட்டங்களையும் ஒழித்துவிட வேண்டும் என்கிறாயா? ஒழித்துவிட்டால் அரசாங்கம் எப்படி நடக்கும்! அரசாங்கமே வேண்டாம் என்கிறாயா?'' என்றான் ராகவன்.

'' அரசாங்கமே வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. அரசாங்கம் என்றால் இங்கிலீஷ்காரர்கள் ஏற்படுத்தியிருக்கும் ஐ. சி. எஸ். அரசாங்கந்தான் என்பது உங்களுடைய எண்ணம். இங்கிலீஷ்காரர்கள் வருவதற்கு முன்னால் நம்முடைய தேசத்தில் அரசாங்கமே கிடையாதா?''

''ஏன் கிடையாது? பேஷாக உண்டு! இங்கிலீஷ்காரர்கள் வருவதற்குமுன்னால் நம் தேசத்தில் அங்க, வங்க, கலிங்க, குக்குட, கர்நாடக மராட்ட முதலிய ஐம்பத்தாறு ராஜாங்கங்கள் இருந்தன. ராஜாக்களும் இருந்தார்கள். சுல்தான்களும், பாதுஷாக்களும்கூட இருந்தார்கள். அவரவர்கள் இஷ்டமே சட்டமாக அரசாட்சி நடத்தினார்கள். அத்தகைய ராஜாக்களின் ஆட்சிக்கு நாம் திரும்பிப் போக வேண்டும் என்கிறாயா? நீதான் சுதேச சமஸ்தானங்களை ஒழித்துவிட வேண்டும் என்கிறாயே!''

''ஆம்; சுதேச ராஜ்யங்களையெல்லாம் ஒழித்துவிட வேண்டியதுதான். அந்தப் பழைய ஹைதர் காலத்து ஆட்சிக்கோ, பேஷ்வா காலத்து ஆட்சிக்கோ போக வேண்டும் என்று நான் சொல்லவில்லை. பழைய ஆட்சி வேண்டாம் என்றால், புதிய ஆட்சி என்பது இங்கிலீஷ்காரர்கள் ஏற்படுத்தியிருக்கும் ஐ. சி. எஸ். ஆட்சிதானா? உலகத்தில் வேறு தேசங்கள் இல்லையா? அந்தந்தத் தேசங்களில் அரசாங்கம் நடக்கவில்லையா?''

'' நடக்கிறது, அப்பனே, நடக்கிறது. ஜெர்மனியில் ஹிட்லர் ஆட்சி நடக்கிறது. இத்தாலியில் முஸோலினியின் ஆட்சியும் நடக்கிறது. இங்கிலாந்திலிருந்து திரும்பும்போது ஜெர்மனிக்கும் இத்தாலிக்கும் நான் போய்விட்டு வந்தேன். கல்விக்கும் நாகரிகத்துக்கும் பெயர்போன ஐரோப்பாவில் நடக்கும் அரசாங்க முறைகளைப் பார்த்தால் ஆங்கில ஆட்சி முறை எவ்வளவு மேலானது என்று உனக்குத் தெரியும். அங்கேயெல்லாம் ஜனநாயகம் என்பது மருந்துக்கும் கிடையாது. சுதந்திரம் என்ற பேச்சையே எடுக்கக் கூடாது....''

''அதைப் பற்றி நமக்கென்ன கவலை? ஹிட்லரும் முஸோலினியும் எவ்வளவு

படுசுட்டியான குடும்பம்!
எல்லோரும் என்னோட
ஜான்ஸன்ஸ்* எப்பவும்
உபயோகிக்கிறாங்க!




குழந்தைகளுக்கு உகந்தது,
உங்களுக்கும் சிறந்தது.

# எண்ணிய வண்ணமே!

## லிப்டன்

# ரூபி டஸ்ட்

தேயிலையின் வெற்றிச் சாதனை
உங்களைப் போன்ற மக்களுக்கே
உரித்தானது.




ரூபி டஸ்ட்: நிறைந்த ருசி; நல்ல நிறம்; கோடியில தயாராகும் பானம். வேறெந்தத் தூள் தேயிலையையும்விட அதிகக் கோப்பைகள் அளிப்பதுகூட.

**தூள் தேயிலைகளில் ஒப்புயர்வற்ற மன்னன்**



பாக்கிங் செய்த தேயிலை மட்டுமே புதிதாகவும் மணத்துடனும் திகழ்கிறது

CRDC-6R/172 TAM

பொல்லாதவர்களா யிருந்தபோதிலும் அவரவர்களுடைய நாட்டுக்குள்ளே தானே இருக்கிறார்கள்? இங்கிலீஷ் காரர்களைப் போல் உலகத்தையே கட்டி ஆள அவர்கள் ஆசைப்படவில்லையே? பிற நாடுகளையெல்லாம் தங்களுடைய கொடுங்கோல் ஆட்சிக்கு உள்ளாக்கவில்லையே?.....''

''உனக்கு எப்படித் தெரியும்? அவர்களுக்கும் சந்தர்ப்பம் கொடுத்தால் தங்கள் சொருபத்தைக் காட்டுவார்கள். இங்கிலீஷ்காரர்களைவிட எவ்வளவோ பொல்லாதவர்களா யிருப்பார்கள்.... சீனாவில் ஜப்பான் செய்கிற அநியாயத்தைப் பார்!''

''இங்கிலீஷ்காரர்களுடைய கொட்டத்தை அடக்கக் கூடிய கீழ் நாடு ஜப்பான் ஒன்றுதான். சீனாவில் ஜப்பான் அக்கிரமம் செய்வதாகச் சொல்லுகிறதெல்லாம் இங்கிலீஷ்காரர்கள் செய்யும் பிரசாரந்தானே? உண்மை நமக்கு எப்படித் தெரியும்? என்னைக் கேட்டால் இங்கிலீஷ்காரர்களின் அரசாட்சியைக் காட்டிலும் வேறு எந்த அரசாட்சியும் மேல் என்று சொல்லுவேன். இங்கிலீஷ் ஆட்சி ஒரு தேசத்தின் ஆத்மாவையே அழித்து விடுகிறது. தேச மக்களுக்குள் பிரிவையும் பிளவையும் உண்டாக்குகிறது.......''

''சூரியா! நன்றாகச் சொன்னாய்! நமது தேசத்தில் ஏற்கனவேயுள்ள பிளவுகளையும் பிரிவுகளையும் விடவா இங்கிலீஷ் ஆட்சியால் அதிகம் உண்டாகி விட்டது?''

''இங்கிலீஷ்காரர்கள் தலையிடாமல் இருந்தால் நம்மிடையே இருந்த பிளவுகளும் பிரிவுகளும் இதற்குள் தீர்ந்து போயிருக்கும்!''

''சரித்திரத்தையே பொய் என்று நீ சாதிக்கப் பார்க்கிறாய்! உன்னோடு எப்படி விவாதம் செய்வது?'' என்று அலுத்துக் கொண்டான் ராகவன்.

இந்தச் சமயத்தில், ''போதும் உங்கள் பேச்சு! சண்டையை நிறுத்துங்கள்; ஆக்ரா ஸ்டேஷன் வந்துவிட்டது!'' என்றாள் சீதா.

''நேபிள்ஸ் நகரத்தைப் பார்த்து விட்டுச் செத்துப் போகவும்!'' என்று மேநாட்டில் ஒரு வசனம் வழங்குகிறது. ''ஆக்ராவைப் பார்க்கும் வரையில் உயிரோடிருக்கவும்!'' என்று இந்தியாவில் பிறந்தவர்களுக்கு நாம் சொல்கிறோம்.

இந்தியா தேசத்தின் மத்திய கால மகோந்நதத்தையும் கலை வளத்தையும் அறிந்து கொள்ள விரும்புவோர் ஆக்ரா நகரைப் பார்க்க வேண்டும். மனிதனுடைய உள்ளமானது கற்பனை செய்யக்கூடிய இன்ப மயமான சொர்க்க பூமியும் கந்தர்வ லோகமும் எப்படி இருக்கும் என்று தெரிந்துகொள்ள விரும்புவோர் ஆக்ராவை அவசியம் பார்க்க வேண்டும்.

அக்பர் சக்கரவர்த்தி மொகலாய சாம்ராஜ்யத்தின் தலைநகரைத் தில்லியிலிருந்து ஆக்ராவுக்கு மாற்றி ஆக்ராவுக்கு உயர்வையளித்தார். அக்பரின் பேரன் ஷாஜஹான் சக்கரவர்த்தி ஆக்ராவில் சொப்பனபுரியைப் போன்ற பற்பல பளிங்கு மாளிகைகளும் தாஜ் மகாலும் கட்டி ஆக்ரா நகரை உலக சரித்திரத்தில் என்றும் நிலைபெறக் கூடிய அமரபுரியாக்கினார்.

ஆக்ராவுக்குப் போகிறவர்கள் சாதாரணமாக முதலில் அந்நகரின் பழைய கோட்டையிலுள்ள அரண்மனைகளைப் பார்க்கப் போவார்கள். பார்த்து வியந்து, ''இதைக் காட்டிலும் அதிகமான அற்புதம் என்ன இருக்கப் போகிறது!'' என்று எண்ணிக் கொண்டு தாஜ்மகாலைப் பார்க்கச் செல்வார்கள். தாஜ்மகாலைப் பார்த்ததும், அதிசயிக்கும் சக்தியையும்கூட இழந்து பிரமித்து நிற்பார்கள்.

அந்த முறையைப் பின்பற்றி ராகவனும் சீதாவும் சூரியாவும் முதலில் ஆக்ராக் கோட்டைக்குப் போனார்கள். கோட்டைச் சுவரின் உயரத்தையும்,









நேற்றுத்தான் கட்டியதுபோல் புத்தம் புதியதாக விளங்கிய அதன் தோற்றத்தையும் கண்டு வியந்தார்கள். கோட்டை வாசலின் கம்பீரமான அமைப்பைப் பார்த்து அதிசயித்தார்கள். பிறகு உள்ளே பிரவேசித்துத் திவானி ஆம் என்னும் பொதுஜன சபா மண்டபத்தை நோக்கிச் செல்கையில் பக்கத்தில் காணப்பட்ட ரோஜா மலர்த் தோட்டத்தைச் சீதா பார்த்தாள். உடனே அந்தப் பக்கம் ஓடினாள். சில நிமிஷங்களுக்கெல்லாம் திரும்பி வந்து, ''ஏன், ஸார்! அனார்க்கலி இங்கேதானே புஷ்பம் விற்றுக் கொண்டிருந்திருப்பாள்? ஸலீம் இங்கேதான் அவளைச் சந்தித்திருப்பான்; இல்லையா? இருவரும் எந்தச் சுரங்க வழியாக யமுனைக் கரைக்குப் போனார்களோ!'' என்றாள்.

''அனார்க்கலியின் ஞாபகம் இன்னும் உன்னை விடவில்லையா?'' என்று நகைத்தான் ராகவன்.

''அதெப்படி அனார்க்கலியை நான் மறக்க முடியும்? அனார்க்கலி புஷ்பம் விற்ற இடத்தைப் பார்ப்பதற்காகத் தானே நான் முக்கியமாக இங்கே வந்தேன்?'' என்றாள் சீதா.

''அனார்க்கலி என்றால் யார்?'' என்று சூரியா கேட்டான்.

''அதுகூடத் தெரியாதா உனக்கு? அனார்க்கலி கதையை நீ வாசித்ததே இல்லையா?'' என்றாள் சீதா.

''வாசித்ததில்லை, அத்தங்கா! எனக்குக் கதையும் நாவலும் அவ்வளவாகப் பிடிக்காது!'' என்றான் சூரியா.

''நம்ம சூரியாவுக்கு நாவலும் கதையும் படிக்க நேரம் ஏது? காரல் மார்க்ஸைக் கட்டிக் கொண்டு அழுவதற்குத்தான் அவனுக்குப் பொழுது சரியாயிருக்குமே?'' என்று எகத்தாளம் செய்தான் ராகவன்.

''அம்மாஞ்சி! நான் சொல்கிறேன், தெரிந்து கொள்! அனார்க்கலி என்றால் மாதுளை மொக்கு என்று அர்த்தம். இளவரசன் சலீம் அவளுக்குக் கொடுத்த பெயர் அது!......''

''ஸலீம் என்பது யார்?''.

''அதுகூடவா தெரியாது? ஜஹாங்கீர் சிம்மாசனம் ஏறுவதற்கு முன்னால் அவன் பெயர் ஸலீம்....''

''சீதாவை என்னவோ என்று நினைக்காதே, சூரியா! மொகலாய சரித்திரத்தில் அவள் பெரிய எக்ஸ்பர்ட்! ஜதுநாத் சர்க்காருக்கும் வின்செண்ட் ஸ்மித்துக்கும் ஏதேனும் சந்தேகம் ஏற்பட்டால் சீதாவினிடம்தான் அவர்கள் கேட்க வருவது வழக்கம்.''

''இவர் இப்படித்தான் பரிகாசம் பண்ணுவார், அம்மாஞ்சி! நான் சொல்கிறதைக் கேட்டுக் கொள். ஜஹாங்கீர் சிறு பிள்ளையாயிருக்கும்போது அவனை வளர்த்த தாய் ஒருத்தி இருந்தாள். அவளுக்கு ஒரு பெண் இருந்தாள். அந்தப் பெண்ணின் அழகைப் பார்த்துவிட்டு ஸலீம் அவளுக்கு 'மாதுளை மொக்கு' என்று பெயரிட்டு அழைத்தான். அவளையே கல்யாணம் செய்து கொள்வதாகவும் வாக்களித்திருந்தான்.''



விக்கோ டெர்மரிக் வானிஷிங் கிரீமைத்
தடவியவுடன் நூறு சதவிகிதமும்
இயற்கையாக எண்ணெய்ப்பசை
மாறுகிறது. இதில் மஞ்சள்'சந்து சுத்த
மான சந்தன எண்ணெயுடன் கலக்கப்
பட்டிருக்கிறது. பண்டைக் காலமுத
லாகவே கிருமிநாசினியும், அலர்ஜி
அழிப்பு சாதனமுமான மஞ்சள் எழிலை ஒளிரச்
செய்ய உபயோகிக்கப்பட்டுவருகிறது. அது
தேவையற்ற பொடி ரோமம் வளர்வதைத் தடை
செய்கிறது. மஞ்சளின் இத்தன்மைகள் பண்
டையகாலம் முதல் அறியப்பட்டவையே !
கிருமி நாசினியான இந்தக்கிரீம் முக க்ஷவரத்
திற்குப் பின் ஏற்படும் புண், வெட்டுக்காயங்
களைக் குணப்படுத்துகிறது. முகச் சருமத்தில்
சோப்பினால் ஏற்படும் கெட்ட விளைவுகளை
அகற்ற உதவுகிறது.

# எழிலுக்கு இயற்கையானவழி...

# விக்கோ டெர்மரிக்

## வானிஷிங் கிரீம்







மேனி எழிலை அதிகப்படுத்திப்
பாதுகாக்க மென்மையும் குளுமையும்
கொண்ட விக்கோ ஸ்னோவும் இருக்
கிறது. இதில் "விட்ச்ஹேஸல்"
(Witch Hazel) என்ற புகழ் பெற்ற
சருமத்தைலம் அடங்கியுள்ளது.

## விக்கோ லாபரெட்டரீஸ்

தாதர், பம்பாய் 14

TML

# லஷ்மியின் விருப்பங்கள் பற்றிய ருசிகரமான தகவல்கள்

எழில் கொழிக்கும் லஷ்மியிடம், அவரது தற்கால விருப்பங்கள் சிலவற்றைப் பற்றிக் கேட்டோம். அவர் சிரித்துக் கொண்டே கூறியதாவது:

ஸித்தார்: அதன் மயக்கும் ஒலியினை நான் மிகவும் விரும்புகிறேன்.

வாசனைப் பொருள்கள்: மென்மையான அத்தர்.

ஞாயிற்றுக்கிழமை: வாரத்தில் நான் மிகவும் விரும்பும் கிழமை.

அவரது எழிலின் ரகசியத்தைப் பற்றிக் கேட்ட பொழுது அவர் புன்சிரிப்புடன் கூறினர். 'லக்ஸ்தான், எப்பொழுதுமே''

'எனது மேனியின் பாதுகாப்புக்கு நான் வேறெந்த சோப்பையும் நம்புவதில்லை. மென்மையான லக்ஸ்தான் எப்போதும் நான் விரும்புவது'.




இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

HDL-3848 A

இப்படிக் கதை சொல்லிக் கொண்டே அவர்கள் திவானிகாஸ் என்னும் அழகிய பளிங்குக் கல் சபா மண்டபத்தை அடைந்தார்கள். மண்டபத்தின் அழகிய தூண்களையும் மேல் விதானத்தையும் விதம்விதமான சித்திர வேலைப்பாடுகளையும் கண்டு அதிசயித்தார்கள்.

பிறகு அரண்மனையின் அந்தப்புரத்துக்குச் சென்றார்கள். அங்கே ஷாஜஹானின் புதல்விகள் ரோஷனாராவும் — ஜஹானாராவும் வசித்த இடங்களைப் பார்த்தார்கள். கண்ணாடி மஹாலைப் பார்த்தார்கள். . பிறகு அந்தப்புரத்து ராணிகளும் சேடிகளும் ஜலக்ரீடை செய்வதற்காக அமைத்த பளிங்குக் கல் குளங்களைப் பார்த்தார்கள். அந்த நாளில் ராணிகளின் நூபுரங்களோடும் சிலம்புகளோடும் போட்டி யிட்டுக் கொண்டு சலசலவென்ற சத்தத்துடன் தெளிந்த நீர் ஓடிக் கொண்டிருந்த பளிங்குக் கல் ஓடைகளைப் பார்த்தார்கள்.

"அடாடா! இந்த அரண்மனை அந்தப்புரத்தில் ராணிகளும் ராஜகுமாரிகளும் வசித்துக் கொண்டிருந்த காலத்தில் எப்படியிருந்திருக்கும்?" என்றாள் சீதா.

"எப்படி யிருந்திருக்கும்? இங்கே வசித்தவர்களுக்கு நரகமாக இருந்திருக்கும்; சிறைச்சாலையாக இருந்திருக்கும். கூண்டில் அடைக்கப்பட்ட கிளிக்குத் தான் வசிக்கும் கூண்டைப் பார்த்தால் என்ன தோன்றும்? தங்கத்தினால் செய்து ரத்தினங்கள் இழைத்த கூண்டாயிருந்தாலும், கிளிக்கு அதன் கூண்டு சிறைச்சாலைதானே?" என்றான் சூரியா.

"பலே, சூரியா! அத்தங்காளுக்குச் சரியான அம்மாஞ்சி நீதான்!" என்றான் ராகவன்.

"நீங்கள் இரண்டு பேருமாய்ச் சேர்ந்து கொண்டு எனக்கு அசட்டுப் பட்டம் கட்டப் பார்க்கிறீர்கள். இந்த மாதிரி சலவைக் கல் அரண்மனையைச் சிறைச்சாலை என்று சொன்னால் அது உண்மையாகிவிடுமா? இந்த மாதிரி ஒரு சிறைச்சாலை கட்டி அதில் இருக்கச் சொன்னால் யார்தான் இருக்கமாட்டேன் என்பார்கள்? என்னை இருக்கும் படி சொன்னால் இருந்து விடுவேன்!" என்றாள் சீதா.

"சீதா! இந்த அரண்மனைகளைப் பார்த்து அவ்வளவு மயங்கி விடாதே! இவற்றைக் கட்டிய பாதுஷாக்களும் ராஜாக்களும் இருந்த காலத்தில் இந்த நாட்டில் எந்த ஸ்திரீயும் பத்திரமாயிருக்க முடியவில்லை. அரசனுடைய கண் பார்வைக்கு எந்தப் பெண்ணாவது



"என்ன! கையை நீட்டிண்டே நடக்கிறே?"

"என் ஸ்பெக்ஸை யாரும் இடித்துத் தள்ளாமல் இருக்க!"




"போரடிக்குது! புள்ளிவிவரக் கோலம் போடறேன்!"

ஆளாகி விட்டால், ஒன்று அவள் உயிரை இழக்க வேண்டும், அல்லது கற்பை இழக்க வேண்டும் என்ற நிலைமையா யிருந்தது. ஏதோ கடவுள் அருளால் இங்கிலீஷ் அரசாங்கம் இந்தியா தேசத்துக்கு வந்தது" என்றான் ராகவன்.

"இதை நான் ஒப்புக் கொள்ளவே மாட்டேன். இங்கிலீஷ் ஆட்சி வந்ததினால் என்ன ஆகிவிட்டது? இன்றைக்கும் இங்கிலீஷ் மேலதிகாரத்துக்கு உட்பட்ட சுதேச சமஸ்தானங்களில் மகாராஜாக்கள் என்னவெல்லாம் அக்கிரமம் பண்ணுகிறார்கள்?"

''உங்கள் சண்டையை மறுபடியும் ஆரம்பித்துவிட்டீர்கள். நீங்கள் சொல்வது ஒன்றும் சரியில்லே. நானும் கொஞ்சம் சரித்திரம் படித்துத் தெரிந்து கொண்டிருக்கிறேன். சிவாஜி மகாராஜாவின் முன்னால் முஸ்லிம் ஜாகீர்தாரின் பெண்ணைக் கொண்டு போய் நிறுத்தியதும் என்ன சொன்னார்? 'அம்மணி! என்னுடைய தாயார் உன்னைப் போல் அழகாயிருந்தால் நானும் எத்தனையோ அழகாயிருந்திருப்பேனே?' என்று சொல்லிவிட்டு அந்தப் பெண்ணைச் சகல மரியாதைகளுடன் தகப்பனாரிடம் சேர்ப்பித்துவிடவில்லையா? இந்த அரண்மனையைக்கட்டிய ஷாஜஹானையே பாருங்கள். மும்தாஜ் பீகத்தைக் கல்யாணம் செய்து கொண்ட பிறகு இன்னொரு ஸ்திரீயை அவன் கண்ணெடுத்துப் பார்த்தானா? மும்தாஜ் செத்த பிறகுகூட அவளை ஷாஜஹான் மறக்கவில்லேயே? அவளுக்காக எத்தனை கோடி ரூபாய் செலவு செய்து தாஜ்மகாலைக் கட்டினான்? அதோ பாருங்கள்!'' என்றாள் சீதா.

அப்போது அவர்கள் மல்லிகை மாடம் என்று பெயர் பெற்ற அரண்மனைப் பகுதியின் மேல் தாழ்வாரத்தின் வழியாகப் போய்க் கொண்டிருந்தார்கள். அங்கிருந்து பார்த்தால் யமுனை நதிக்கு அக்கரையில் தாஜ்மகாலின் அற்புதத் தோற்றம் காணப்படும்.

மூன்று பேருமே சிறிது நேரம் வரையில், அந்தக் காட்சிக்குத் தங்கள் உள்ளத்தைப் பறி கொடுத்தவர்களாய்ப் பார்த்துக் கொண்டே நின்றார்கள்.

பிறகு சீதா, ''நீங்கள் இரண்டு பேருமாகச் சேர்ந்து என்னைப் பைத்தியமாக்கப் பார்க்கிறீர்களா? ஷாஜஹான் சக்கரவர்த்தி எப்பேர்ப்பட்டவன் என்று தாஜ்மகாலைப் பார்த்தால் தெரியவில்லேயா? எவ்வளவு சிரமம் எடுத்து, எவ்வளவு பிரயத்தனம் பண்ணி, எவ்வளவு செலவு செய்து தாஜ்மகாலை ஷாஜஹான் கட்டியிருக்க வேண்டும்? மும்தாஜிடம் அவருக்கு எவ்வளவு ஆசை, எவ்வளவு காதல் இருந்திருக்க வேண்டும்? தாஜ்மகாலைக் கட்டியது மட்டுமா? கட்டிய பிறகு ஆயுள் முடியும் வரையில் தினம் தினம் தாஜ்மகாலைப் பார்த்துக் கொண்டேயிருந்து கடைசியில் செத்துப் போனானாம். அவன் தாஜ்மஹாலைப் பார்த்துக் கொண்டே இருந்தது இந்த மல்லிகை மாடத்திலிருந்துதான் போலிருக்கிறது!'' என்றாள்.

''ஆமாம், சீதா! உன்னுடைய ஊகம் உண்மைதான். இந்த இடத்தில் இருந்தபடியேதான் ஷாஜஹான் தாஜ்மகாலைப் பார்த்துக் கொண்டே செத்துப் போனான்!'' என்றான் ராகவன்.

''ஏன் தெரியுமா, அத்தங்கா! நான் படித்த சரித்திரத்தைச் சொல்லுகிறேன். ஷாஜஹான் அரசாங்கப் பொக்கிஷத்தை இப்படி யெல்லாம் வீண் விரயம் செய்தது அவனுடைய மகன் அவுரங்கஜீப்புக்குப் பிடிக்கவில்லேயாம். தகப்பனாரைச் சிறைப்படுத்தி இந்தக் கோட்டையிலே அடைத்து வைத்து, 'நீங்கள் உங்களுடைய அருமை மனைவியின் ஞாபகமாகக் கட்டிய கட்டடத்தைச் சதா சர்வகாலமும் பார்த்துக் கொண்டேயிருங்கள்!' என்று சொல்லிவிட்டானும். ஷாஜஹான் இங்கேயே இருந்து தாஜ்மகாலைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டே இறந்தானும்!'' என்றான் சூரியா.

''ஷாஜஹானுக்குச் சரியான தண்டனைதான். நான் அவுரங்கஜீப்பாயிருந்தாலும் அப்படித்தான் செய்திருப்பேன்!'' என்றான் ராகவன்.

''அப்படி யெல்லாம் சொல்லாதீர்கள்! இப்பேர்ப்பட்ட அற்புதமான காட்சிகளைப் பார்த்துவிட்டு இந்த மாதிரி பேசுகிறீர்களே! உங்களுக்கெல்லாம் கண் எங்கே போயிற்று?'' என்றாள் சீதா.

உண்மையில் அந்தச் சமயம் ராகவன் சூரியா இருவருடைய கண்களும் தூரத்தில் தெரிந்த தாஜ்மகாலையோ, அல்லது பக்கத்திலே இருந்த அற்புதமான பளிங்குக் கல் சித்திரங்களையோ, பார்க்கவில்லே. இந்த மல்லிகை மாடத்தின் தாழ்வாரத்தின் வழியாக எதிர்ப்புறமிருந்து வந்து கொண்டிருந்தவர்களின் மீது அவர்களுடைய பார்வை போயிருந்தது.

மூன்று பேர் வந்து கொண்டிருந்தார்கள். இருவர் ஸ்திரீகள்; ஒருவர் ஆடவர். கராச்சி காங்கிரஸின்போது விமான கூடத்தில் ராகவன் பார்த்த பெண்கள்தான் அவர்கள் இருவரும். ஒருத்தி தாரிணி; இன்னொருத்தி அவளுடைய சிநேகிதி. ராகவன் செயலற்று நின்றான். தாரிணியின் முகத்திலிருந்து அவனுடைய கண்கள் அப்பால் இப்பால் நகரவில்லே. வேறு யாரையும் எதையும் அவனால் பார்க்க முடியவில்லே. எங்கே இருக்கிறோம், யாருடன் வந்திருக்கிறோம் என்பதையெல்லாம் அவனுடைய உள்ளம் மறந்து விட்டது. எதிரில் தாரிணி வருகிறாள் என்கிற ஒரு நினைவுதான் அவனுடைய மனத்தில் நிலைபெற்றிருந்தது. (தொடரும்)

# "வைக்கோ லாரநாதன்"

## 19. ஏஜாலிக்கும் நட்சத்திரம்



திரை வானில் படிப்படியாக மங்கி மறைகிற நட்சத்திரங்களும் உண்டு; ஒரே நிதானத்துடன் ஒளிர்ந்து கொண்டே யிருந்து ஒரு தருணத்தில் பளீரென்று கண்ணைப் பறிக்கிற மாதிரி பிர காசித்து, அடுத்த கட்டத்தில் கப்பென்று இருண்டு போகிற நட்சத்திரங்களும் உண்டு. இந்த இரண்டு வகைகளில் பிரமீளா வின் திரை உலக வாழ்வு எவ் வாறு முடியும் என்பதை இன்று ஊகிப்பதற்கில்லைதான். சில காலத்துக்கு முன்னால் 'திரை வானில் ஒரு புதிய நட்சத்திரம்' என்று அறிமுகமான அவள், இன்னும் புது மெருகு குன்றாமல் ஜொலித்துக் கொண்டுதான் இருந்தாள். அவளுடைய கை ரேகைகளைப் பூதக் கண்ணாடி கொண்டு ஆராய்ந்த ஜோதிடர் கிரகச் சேர்க்கை பிரமாதமாக இருப்பதாகச் சொல்லி யிருந் தார். இத்தனை பிராபல்யம் அடைந்து பேரும் புகழும் செல்வ மும் கொண்டு விளங்கும் இவளு டைய ஜாதகம் அசாதாரண மான ஒன்றாகத்தானே இருக்கும் என்பதால் அவர் அப்படிச் சொன்னாரோ, அல்லது ஜோதிட ரின் வாக்கு பொய்க்கக் கூடாது என்பதற்காகத்தான் அவளிடம் செல்வம் கொழித்ததோ, எப்படி யானாலும் — நாஸிக் அச்சுக்கூடத் இல் எக்கச்சக்கமாக அச்சான நோட்டுக் களில் ஒரு கணிசமான பகுதி கறுப்பும் வெளுப்புமாகப் பிரமீளாவிடம் வந்து குவிந்து கொண்டிருந்தது.

வெளுப்புப் பணத்தை அவள் பாங்கில் போட்டாள்; கறுப்புப் பணத் தைப் பாதாள அறையில் பதுக்கினாள். வீடுகளையும் மனைகளையும் கேட்ட விலை கொடுத்து வாங்கினாள்; புடவை களையும் நகைகளையும் விலை கேட்காம லேயே வாங்கினாள். அப்படியும் பணத் தைச் செலவழிக்க மார்க்கம் புரியாத போது அவளுக்குப் 'போர்' அடித்தது. ஆனால் அவள் தாயாருக்கு மட்டும் இதை ஒப்புக் கொள்ள முடியவில்லை. 'பணத்தைக் கையாண்டு ஒருத்திக்குப் போர் அடிக்க முடியுமா? அழகுதான்!' என்று அங்கலாய்த்தாள் கனகம். 'ஐயோ! வருமான வரி என்று பிடுங்கிக் கொண்டு போகிறானே' என்று புலம்பி னாள். 'போதாக் குறைக்குச் சொத்து வரி வேறுமே?' என்று வேதனைப்பட்

கி. ராஜேந்திரன்



டாள். கறுப்புப் பணம் வைத்திருப்ப தாகச் சந்தேகித்து அதிகாரிகள் நட வடிக்கை எடுத்தால், 'என்ன அநியாயம்! இப்படிப் படை எடுப்பார்களா? என் மகளுக்கு லக்ஷ்மி கடாட்சம் இருப்பது ஒரு பாவமா?' என்றாள். சில மாதங்கள் வரை 'ரெய்ட்' நடக்காமல் இருந்துவிட் டாலோ, 'அடடா! யாரும் 'ரெய்ட்' பண்ணவில்லையே; 'பிரமீளாவுக்கு மவுசு குறைந்து விட்டது. அதனால்தான் அவ ளிடம் கறுப்புப் பணம் இல்லை' என்று நாலு பேர்கள் நினைத்து விடுவார்களே' என்பதாகக் கவலைப்பட்டாள்.

பிரமீளாவின் மாளிகை என மதிக்கத்தக்க பங்களாவில் பிரம்மாண்டமான படுக்கை அறையில் மிகப் பெரிய 'வார்ட்ரோ'பில் கணக்கற்ற புடவைகள், கண்ணைப் பறிக்கும் வண்ணங்களில் தொங்கின. இரும்பு பீரோவில் ஏராளமான நகைகள் 'டால்' அடித்தன. நாலாபுறமும் அயல்நாட்டிலிருந்து வந்த முதல்தர நிலைக் கண்ணாடிகள் அவள் எழில் உருவத்தைப் பிரதிபலிப்பதில் பெருமை கொண்டன. 'பெட்ரூமி'ன் மையத்தில் இருந்தது ஒரு வட்ட வடிவமான மாபெரும் கட்டில். ஒரு பட்டனை அழுத்தினால் அது மெல்ல உயரும்; இன்னொரு பட்டனை அழுத்தினால் அது தளுக்காகக் கீழே இறங்கும், மற்றொரு பட்டனை அழுத்தினால் கட்டில் மெல்லச் சுழலும். படுக்கையில் புரள வேண்டுமானால் அதற்குக்கூடப் பட்டனை அழுத்தினால் போதும், மெத்தையில் அலைகள் கிளம்பிப் பிரமீளாவைப் புரள வைக்கும் என்று சொல்லிக் கொண்டார்கள்! அத்தனை ஏற்பாடுகள் அதில் உண்டு! அதில் படுத்திருப்பதோ மேகப் பொதியில் சயனித்திருப்பது போல்தான்! பிரமீளா நூற்றுப் பதினெட்டு பவுண்டு எடைதான் என்றாலும் அவளும் கூட இலவம் பஞ்சுப் பொதியில் வைத்த கிலோ கல்லைப் போல் அமுங்கிக்கிடப்பாள்.

அவளுடைய டிரஸ்ஸிங் டேபிளில் ஏராளமான 'மேக் அப்' சாதனங்கள் தவிர ஸெண்டு மட்டுமே நாற்பது வகைகள் இருந்தன. எந்த செண்டை என்றைக்குப் பூசிக் கொள்வது என்பது பற்றிப் பெரிய குழப்பம் ஏற்பட்டு வருகிறதென்றும் முந்நூற்று அறுபத்தைந்து வகை இருந்துவிட்டால் ஒவ்வொரு நாளும் ஒவ்வொன்று என்ற கணக்கில் வருஷம் முழுதும் டுவவ்வேறு விதமாக மணக்கலாம் என்றும் அவள் அபிப்பிராயப்பட்டதாக ஒரு பத்திரிகை மகத்தான செய்தி வெளியிட்டு, அதற்கென்று அவள் ஸெண்டை 'ஸ்ப்ரே' செய்து கொள்ளும் கருவியில் உள்ள பல்பை அழுத்துவது போல் பிரத்தியேகப் புகைப்படம் எடுத்துப் பிரசுரித்துத் தன் வாசகர்களைப் பரவசப்படுத்தி யிருந்தது. அவள் ஸெண்டுகள் மட்டுமா? அவள் தாயார், நாய்க் குட்டி, அவள் செருப்புக்கள், ஜோஸியர், அவள் கட்டில், தையல்காரர் என்று இப்படி அவளுடன் தொடர்பு கொண்ட அஃறிணைப் பொருள்கள் மட்டுமின்றி மனிதர்களும் பிரசித்தி பெற்றனர்.

ஒரு மந்திர சக்திபோல் அனைவரையும் ஆட்கொண்ட அவளுடைய கவர்ச்சிகரமான அழகில் மக்கள் மயங்கினார்கள் என்றால், ஸ்டுடியோக்களில் தொழில் ரீதியில் அவளுடன் பழகியவர்களோ, அந்தக் கிளாமரை வழிபடவே செய்தார்கள். லைட் பாய் முதல் படாதிபதி வரை சிறிதும் பெரிதுமான தங்கள் மணிபர்ஸ்களை நிரப்பிக் கொள்ள அந்தக் கவர்ச்சிதான் உதவுகிறது என்பதை நன்றாக உணர்ந்து வணங்கினார்கள்.





இது ஒரு பக்கம். ஆனால் இந்த இனிய இசைத் தட்டுக்கு மறு புறம் ஒன்று உண்டு என்பதும் அவனுக்குத் தெரியும். தான் எதிரே இருக்கும்போது பலவிதமாகவும் தன்னைத் திருப்திப்படுத்த, மகிழ்விக்க பயபக்தியுடன் நடந்து கொள்கிறவர்கள், தான் அப்பால் போனதும் இசைததட்டின் மறு பக்கத்தில் ஊசியை ஓட்விடுகிறார்கள். அப்போது எழுவது.... இசையா அது? வசை! அவர்கள் வணங்கி வழிபட்ட அதே கிளாமர் இப்போது அதன் உயர் பீடத்திலிருந்து கீழே இறக்கப்பட்டது மட்டுமின்றிச் சாக்கடையில் அல்லவா புரட்டி எடுக்கப்படுகிறது! எவ்வளவு பச்சை

பச்சையாகப் பேசுகிறார்கள்! எத்தனை விதமாக வெல்லாம் அவதூறுகளைப் போட்டி போட்டுக் கொண்டு அள்ளிச் சொரிகிறார்கள்! அதில்தான் அவர்களுக்கு எத்தனை இன்சுவை; ஆனந்தம்! திரையிலும், சில சந்தர்ப்பங்களில் நேரிலும், தன்னைப் பார்க்கும்போது பிரமித்து நிற்கும் சாமானிய மக்கள்கூட அவளுடைய அந்தக் கவர்ச்சிக் கதிர் வீச்சுக்கு உட்படாதபோது அடியோடு மாறித்தான் போய் விடுகிறார்கள். வாயில் வந்ததையெல்லாம் வளர்த்துப் பேசுகிறார்கள்.

இத்தகைய ஆபாசமான பேச்சுக்களைக் காது கொடுத்துக் கேட்க வேண்டிய துர்ப்பாக்கியம் நல்ல காலமாக அவளுக்கு ஏற்பட்டதில்லை. ஆனால் உண்மை நிலைமையை அவள் காலே அரைக்கால் மில்லி மீட்டர்கூடப் பிசகாமல் கச்சிதமாக அளந்து வைத்திருந்தாள். தன்னைத் தானே அவள் ஏமாற்றிக் கொள்ளவில்லையே ஒழிய, தான் இதையெல்லாம் உணராதது போலவே நடித்துப் பிறரை ஏய்த்து வந்தாள்.

இத்தகைய சூழலில்தான் அவளை ஒரு சந்தர்ப்பத்தில் பார்த்திபன் சந்தித்தான். காமிராமேன் சேகரின் நெருங்கிய நண்பன் என்று சொல்லிக் கொண்டு ஒரு நாள் ஷூட்டிங்கின்போது அவன் அறிமுகமானான். அவனது தோற்றத்தைவிட அவனுடைய பேச்சும் சுபாவமும் பிரமீளாவை உடனடியாகக் கவர்ந்து விட்டன.

கிட்டத்தில் நெருங்கிப் பிரமீளாவுடன் பழக வேண்டிய அவசியம் பலருக்கு ஏற்பட்டிருக்கிறது. சக நடிகர், ஒளிப்பதிவாளர், ஒப்பனையாளர், இயக்குநர் என்று பலர் அவளை அணுகித் தொட்டுப் பேசியும் இருக்கிறார்கள். அவ்வாறு நெருங்கி வர நேரிட்டபோது ஏதோ வேலைப்பாடுகள் மிகுந்த விலைமதிக்கமுடியாத ஒரு கண்ணாடிப் பாத்திரத்தைக் கையாள்வது போலத்தான் நடந்து கொள்வார்கள். எங்கே சற்றுக் கவனப்பிசகாக இருந்து விட்டால் அந்த அபூர்வப் பாத்திரம் கீழே விழுந்து நொறுங்கி விடுமோ? நம்மைப் பெரும் பழி சூழுமோ என்று அஞ்சியதுபோல் பழகினார்கள்.

ஆனால் பார்த்திபன் நடந்துகொண்ட விதத்தில் இயல்பாகவே ஒரு முரட்டுத்தனம் இருந்தது. அவன் பேச்சிலே ஓர் அலட்சிய அட்டகாசம் அழுத்தமாக இடம் பெற்றிருந்தது.

ஸ்டுடியோவில் தொழில் முறையில் தன்னிடம் தொடர்பு கொள்பவர்கள் அடக்கமாகப் பேசித்தான் அவள் கண்டிருக்கிறாள். சில சமயங்களில் பொது மக்கள் அவளைச் சமீபிக்க நேரிட்டபோது பேசலாமோ கூடாதோ, அந்தத் தகுதி நமக்கு உண்டோ இல்லையோ என்று தயங்குவதை அவள் கவனித்திருக்கிறாள். அவர்களுக்குள்ளேயே குசுகுசுவென்று பேசிக் கொள்வார்கள். கூட்டத்தில் தொலைவில் கண்ணுக்குத் தெரியாமல் இருந்து கொண்டு ஆபாசக் கூக்குரல் இட்ட ஓரிரு கோழைகளும் உண்டு. ஆயின் பார்த்திபன் இவர்களினின்றும் முற்றிலும் வேறுபட்டவனாக இருந்தான்.

சேகர் அவனை அறிமுகம் செய்து வைத்த மறுகணமே அவன் கூறிய வார்த்தைகள் அவனுடைய தனித்தன்மையை நிரூபித்து அவளுக்கு அதிர்ச்சி வைத்தியமும் செய்தன. "எல்லோரும் இன்றைக்கு ஷூட்டிங் பிரமாத சக்ஸஸ் என்று சொல்லி உங்களை வாழ்த்தி விட்டுப் போய்விட்டார்கள். ஆனால் நான் கும்பலோடு கோவிந்தா போடுகிறவன் இல்லை" என்றான்.

"தனியாக இருந்தால்தான் போடுவீர்களாக்கும்!" என்றாள் பிரமீளா, கோபத்துடன் கிளர்ந்த கிண்டலின் வேகத்தைப் புன்னகையால் தணித்தபடியே.

"பிரஹலாதனைப் பாடாய்ப் படுத்தியது போல் என்னைச் சித்திரவதை செய்தாலும் எனக்குத் தோன்றுவதைத் தான் நான் சொல்வேன்."

கலகலவென்று அவள் சிரித்தாள். "உங்களை யாரும் துன்புறுத்தாமலேயே நீங்கள் உங்களுக்குத் தோன்றுவதைச் சொல்லலாம், ஸார்! திஸ் இஸ் எ ஃப்ரி கண்ட்ரி!"

"சுதந்திர தேசமா? யார் சொன்னது? ஓர் உதாரணம் பாருங்கள்: என் உறவுக்காரர் ஒருவரை ஒரு வர்த்தகப் பிரமுகரிடம் ரொம்பச் சிபாரிசு பிடித்து 'அகவுண்டண்ட்' வேலைக்கு வைத்தேன். கொஞ்ச நாளைக்குப் பிறகு அந்தப் பிரமுகரைக் கேட்டேன். 'ஸார்! அவர் எப்படி வேலை செய்கிறார்? கணக்கு வழக்கெல்லாம் சரியாக வைத்துக்கொள்கிறாரா? உங்களுக்குத் திருப்தியாக இருக்கா?' என்று. அதற்கு அவர் என்ன பதில் சொன்னார் தெரியுமா? 'அவனுக்கு அப்படி ஒண்ணும் சாமர்த்தியம் போதாது. அதனால்தான் எனக்குச் சௌகரியமாய் இருக்கிறது. கணக்கை நான் சொல்கிறபடி ஏன் என்று கேட்காமல் எழுதி விட்டுப் போய்விடுகிறான் பார்!'"

பிரமீளா பெரிதாகச் சேகருடன் சேர்ந்து சிரிக்க அந்தச் சிரிப்பினூடேயே பார்த்திபன் தொடர்ந்தான்: "இதே போல்தான் எல்லாத் துறைகளிலும்.




ஆண்மை —
அடக்கியாளும்,
ஆர்வமூட்டும்,
அலைபாயும்,
அதிரடிக்கும்.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த படைப்பு
‘டெரோஸெல்’
ஷர்ட்டிங் !

**டெரோஸெல்®**

‘டெரோஸெல்’ என்றொரு திருச்சொல்—தரிப்பவனை
மன்னனாக்கும் தாரக மந்திரம்! மபத்லால் ‘டெரோஸெல்’
ஷர்ட்டிங்—எழிலாடும் வண்ணங்களில், இளஞ் சாயல்களில்,
திசையெட்டும் வென்றிட்ட டிசைன்களில் வருகுது.
ஒப்பிலா ஆடவ·மாமணிகளுக்கு உறவுசொல்லும் ஷர்ட்டிங்!
உயர்தரக் காட்டன் மற்றும் போலியெஸ்டர் இழைகலந்த
பழுதில்லா நெசவு!

**மபத்லால் க்ரூப்**

AIYARS-M.245 TM

அவன் எஜமானனுக்குத் திருப்தி அளிப்பது போல் கணக்கு எழுதினுன் என்ருல், எழுத்தாளன் பத்திரிகை ஆசிரியருக்கு எது பிடிக்கும் என்று யோசித்துக் கதை எழுதுகிருன். பத்திரிகாசிரியரோ பத்திராதிபர் எந்த மாதிரிக் கதையைப் போட்டுப் பத்திரிகையின் விற்பனையை அதிகரிக்க விரும்புவார் என்று பார்க்கிருர். நீங்கள் டைரக்டர் சொல்கிற படி நடிக்கிறீர்கள்; டைரக்டரோ உங்களை எந்த உடை அணியச் செய்து எந்த விதமாகக் காட்டினுல் மக்கள் பார்ப்பார்கள்; படாதிபதிக்குப் போட்ட பணத்துக்கு மேல் திரும்பி வரும் என்று யோசிக்கிருர். அரசியல்வாதி தான் எப்படிப் பேசினுல் மேலிடத்திலிருந்து தமக்கு முதுகில் தட்டும் கையில் டிக்கெட்டும் கிடைக்கும் என்று எண்ணிப் பேசுகிருர். இதிலெல்லாம் சுதந்திர சிந்தனை எங்கே இருக்கிறது? சுதந்திர நாடு என்று நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதோடு சரி! அநேகமாக நம் நாட்டில் எல்லோரும் தங்கள் தங்கள் அலுவலகத்துக்குள் நுழையு முன்னர் வாசலில் முதுகெலும்பைக் கழற்றிக் கோட் ஸ்டாண்டில் மாட்டிவிட்டு வந்தது போலத்தானே நடந்து கொள்கிருர்கள்?''

ஓர் 'அபூர்வப் பிறவியைப் பார்ப்பது போல் பார்த்திபனை மலர மலரப் பார்த்தாள் பிரமீளா. ''என்ன சேகர்! உங்கள் நண்பருக்கு யார் மேல் என்ன கோபம்? படபடவென்று பொரிந்து தள்ளுகிருரே!''

''முதுகெலும்பு இல்லாத எல்லார் மீதும் கோபம்தான்'' என்று பார்த்திபன், சேகர் வாய் திறக்கக் காத்திராமல் தானே பதில் சொன்னுன். ''இந்தப் படத்தில் நீங்கள் நடிக்க முன் வந்தீர்களே, அதற்காக உங்கள் பேரிலும் கோபம்தான்.''

சிரித்தபடியே, ''ஏன்? இந்தக் கதை நன்ருயில்லையா? அல்லது இந்தக் கதாபாத்திரம் எனக்கு ஏற்றதாயில்லையா?'' என்று கேட்டாள் அவள்.

''எல்லாமே கோளாறுதான். ஏதோ மக்கள் இதை விரும்பிப் பார்ப்பார்கள், பணம் பண்ணலாம் என்ற நோக்கத்தில் தான் படம் எடுக்கிருர்களே ஒழியக் கலை உணர்ச்சி இதில் எங்கே இருக்கிறது?''

''சரிதான்! நீங்கள் அஸ்திவாரத்தையே அசைக்க ஆரம்பித்துவிட்டீர்கள்!'' என்ருள் பிரமீளா. ''திரைப் படங்கள் பணம் பண்ணவிட்டால் இத்தனை ஸ்டுடியோக்களையும் மூடிவிட வேண்டியதுதான். இந்தத் தொழிலை நம்பி எத்தனை - ஆயிரம் தொழிலாளர்கள் பிழைக்கிருர்கள் தெரியுமா?''

## சாகடித்த சங்கீதம்!



இத்தாலியிலுள்ள உடின் என்ற நகரத்தில் ஒரு பாப் இசை விழா நடைபெற்றது. அந்த இசைவிழா நடந்து முடிந்ததும், இசை விழா நடந்த இடத்துக்கு அருகில் இருந்த கோழிப் பண்ணையில் இருநூறு கோழிகள் செத்துக் கிடந்தன. மின்சார கித்தார் வாத்தியங்கள் எழுப்பிய கிரீச்சிடும் ஓசை தான் அந்தக் கோழிகளின் சாவுக்குக் காரணம் என்று தெரிய வந்தது. எனினும்-கோழிப் பண்ணையின் சொந்தக்காரர் இதற்கு நஷ்டஈடு கோர முடியவில்லை. அவரும் ஒரு பாப் சங்கீதப் பிரியர். அது மட்டுமல்ல. அந்த இசை விழாவுக்கு ஏற்பாடு செய்தவர்களில் அவரும் ஒருவர்!

ஆதாரம்: நியூடைம்ஸ்

''அவர்களை வாழ வைக்கத்தான் படாதிபதிகள் ஆபாசப் படங்களாக எடுத்துத் தள்ளுகிருர்களாக்கும்! எத்தனை தாராள மனசு! ஆயிரம் பேரை வாழ வைக்க ஆறு லட்சம் மக்களின் மனங்களை விகாரப்படுத்துவது எவ்வளவு பெரிய தொண்டு!''

பிரமீளாவின் வியப்பும் திகைப்பும் இதற்குள் ஓரளவு நீங்கி; அதனிடத்தில் ஓர் ஆவல் — குறுகுறுப்பு குடிகொண்டு விட்டிருந்தது. அவள் நட்சத்திரப் பதவியை அடைந்த பிறகு இதுவரை யாருமே அவளை அதிருப்திக்கு உள்ளாக்க நேரிடுமோ என்று கவலைப்படாமல் இவ்வளவு அழுத்தமாகவும் தைரியமாகவும் எதிர்த்துப் பேசி அவள் கேட்டதில்லை. இது புதிய அனுபவமாக இருந்தது அவளுக்கு. ''உங்கள் நண்பர் ரொம்பச் சுவாரசியமாகப் பேசுகிருர், சேகர்!'' என்ருள் அவள் ஒளிப் பதிவாளரைப் பார்த்து.

சேகர் சொன்னுன்: ''பார்த்திபன் இப்படித்தான் படபடவென்று பேசுவான். ஆனல் இவனுக்கு யாரிடமும் விரோதம் கிடையாது. உயர்ந்த கலை உள்ளம் படைத்தவன்; நன்ருய்ப் படித்தவன். ஸ்டேட் பாங்கில் உத்தியோகம். பொழுதுபோக்காக நண்பர்களிடையில் நாடகங்களையும் திரைப் படங்களையும் விமர்சனம் செய்வான். பயமோ தயக்கமோ இல்லாத சிறந்த 'கிரிடிக்.' ''

''இந்தத் தொழிலில் சம்பந்தப்படாமல் விலகி யிருந்து பார்ப்பவர்களுடைய அபிப்பிராயமும் நமக்குத் தேவை தானே சேகர்? அது நாம் வளர உதவத் தானே செய்யும்'' என்ருள் பிரமீளா.

''படம் மோசம் என்று இவன் கருதினாலும் ஒரு காமிரா கோணம் நன்றாயிருந்ததென்றால் அதைப் பாராட்டுவான். இவனிடமிருந்து ஒரு 'பேஷ்' வாங்கிவிட்டால் எனக்கு ஒரு மாசம் டானிக் சாப்பிட்டு வந்தது போல் தெம்பாக இருக்கும். ஆனால் அந்த பேஷ் இலேசில் வராது!''

''ஆங்கிலப் படங்களை அதிகம் பார்த்தால் சிரமம்தான்;'என்ன ஸார் தமிழ்ப் படங்கள் எடுக்கிறார்கள்' என்று தூக்கி எறிந்து பேசிவிடுவார்கள்'' என்றாள் பிரமீளா. ''அந்த அளவுக்கு நாம் உயர இன்னும் ரொம்பக் காலம் ஆகும்.''

''பார்த்திபன் சில ஆங்கிலப் படங்களைக்கூட நண்பர்கள் வட்டத்தில் நல்ல ஆதாரங்களோடு சாட ஆரம்பித்த போதுதான் எனக்கு உண்மையிலேயே இவனிடம் மதிப்பு ஏற்பட்டது'' என்றான் சேகர்.

''ஆமாம். மேனாட்டிலும் மோசமான படங்கள் எடுக்கிறார்கள் என்பதில் நமக்கெல்லாம் ஓர் அல்ப திருப்தி''என்றான் பார்த்திபன் அசுவாரசியமாகச் சூள் கொட்டியபடி.

சிரித்தாள் பிரமீளா. ''சற்று இருங்கள். நான் மேக்கப்பைக் கலைத்து விட்டு வருகிறேன்'' என்றாள்.

''அதைச் செய்யுங்கள்; எவ்வளவு சீக்கிரம் இந்த அசட்டுப் பிசட்டு உடையைக் களைந்தெறிந்து விட்டுப் புடவை உடுத்துகிறீர்களோ, அவ்வளவுக்கு நல்லது'' என்றான் பார்த்திபன்.

இடுப்புக்கு மூன்று அங்குலம் கீழே ஆரம்பமாகி முழங்காலுக்கு நாலு அங்குலம் மேலே முடிந்து விட்ட ஒரு கால் சராய்; ஆண் பிள்ளைக்காகத் தைக்கப்பட்டதை இரண்டாக மடித்துக் கீழ்ப் பகுதியை வெட்டி எறிந்து விட்டது போல் தோன்றிய ஒரு சட்டை; (அதிலும் மேல் இரண்டு பட்டன்களைத் தைக்க 'மறந்து'விட்டிருந்தான் தையல்காரன்.) கல்யாணத்துக்கு மைசூர்ப் பாகைக் கூறு போடுகிற தாம்பாளத்தில் பருப்புத் தேங்காய்க் கூட்டைப் பற்ற வைத்தது போல் ஓர் அகலமான தொப்பி — இவற்றை அணிந்திருந்தாள் பிரமீளா. போதாக் குறைக்கு இடையில் ஒரு பெல்ட்டிலிருந்து இரு புறங்களிலும் கைத் துப்பாக்கிகள் வேறு தொங்கின.

தன்னைத் தானே ஒரு முறை தலை சாய்த்துப் பார்த்துக் கொண்ட பிரமீளா கபடமில்லாமல் சிரித்துக் கொண்டே கூறினாள்: ''நல்ல பெயர் வைத்தீர்கள், அசட்டுப் பிசட்டு உடையென்று!''

தனது பிரத்தியேக 'கிரீன் ரூ'மை நோக்கி நடந்த அவள், சற்றுத் தூரம் சென்றதும் ஒரு முறை திரும்பிப் பார்த்து ''போய் விடாதீர்கள், சீக்கிரமே சண்டையைத் தொடரலாம்'' என்றாள்.

விட்டுக் கொடுக்காதது போல் அவள் அவ்விதம் சொன்னாளே ஒழிய உண்மையில் சண்டை போட வேண்டும் என்றோ, வாக்குவாதம் செய்ய வேண்டும் என்றோ அவளுக்கு எண்ணம் இல்லை. அவன் பேசுவதைக் கேட்க வேண்டும், அவன் கருத்துக்களைப் புரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம்தான் அவளுக்கு. பார்த்திபனால் திரை உலகைப் புரட்சிகரமான முறையில் திருத்தி விட முடியும் என்ற நம்பிக்கை அவளுக்கு லவலேசமும் இல்லை. அதற்கு இன்னும் எத்தனை தலைமுறைகள் ஆகுமோ? ஆனாலும் சிறந்த நடிப்பு, நல்ல கதை, நுணுக்கமான டைரக்ஷன் திறன் இவையெல்லாம் பற்றி அவனுடன் உரையாடித் தன் அறிவை வளப்படுத்திக் கொள்ளவும் மனத்தை விசாலப்படுத்திக் கொள்ளவும் அவள் விரும்பினாள். என்றாவது ஒரு நாள் அவனிடமிருந்து தன் நடிப்புக்கு ஒரு சபாஷ் பெற முடியுமா பார்க்க வேண்டும் என்ற ஆசையும் தலைதூக்கியது.

அவளுடைய இந்த இரண்டாவது ஆசை — சபாஷ் பெற வேண்டும் என்ற ஆசை — இன்றுவரை நிறைவேறவில்லை. ஆனால் திரை உலகம் பற்றி — அத்துடன் சம்பந்தப்பட்ட பல்துறைக் கலை நுணுக்கங்கள் பற்றி அவர்கள் பல சந்தர்ப்பங்களில் நிறையப் பேசினார்கள்.

அவளுக்கு ஷூட்டிங் இல்லாத நாட்களில் அல்லது வேளைகளில் அவன் அவள் வீட்டுக்கு அவள் அழைப்பின் பேரில் போனான். மணிக் கணக்கில் பேசினான். அவள் ஆர்வத்தைப் பார்க்கையில் அவனுக்கும் முன்னைக் காட்டிலும் திரைப் படக் கலை ரகசியங்களைத் தெரிந்து கொள்வதில் ஈடுபாடு மிகுதியாகி விட்டது. 'டைரக்ஷன் டெக்னிக்', 'லைட்டிங் எஃபெக்ட்', 'தி ஆர்ட் ஆஃப் ஆக்டிங்' என்று பல புத்தகங்களை நூலகங்களிலும் புத்தகக் கடைகளிலும் தேடிப் பிடித்து வாசிக்க ஆரம்பித்தான். உலகப் பிரசித்தி பெற்ற டைரக்டர்கள், நடிக நடிகையரது வாழ்க்கை வரலாறுகளைப் படித்தான். தான் படித்தறிந்த புதுப் புது விஷயங்களைப் பிரமீளாவுக்குச் சொன்னான். வாரம் ஒரு முறையாவது இருவரும் சேர்ந்து சினிமாப் பார்த்து விட்டு வந்து அதை அக்கு வேறு ஆணி வேறாகப் பிரித்துப் போட்டுத் தனித் தனியாக ஒவ்வொரு அம்சத்தையும்

ஆராய்ந்து குறைகளையும் நிறைகளையும் கண்டுபிடித்தார்கள்.

பணமும் புகழும் தராத ஒரு மன நிறைவைப் பிரமீளாவுக்குப் பார்த்திபனின் பேச்சு அளித்தது. அவன் வார்த்தைகள் நெஞ்சைச் சுட்டன; அவன் பற்றிய இடம் வலித்தது. ஆனால் அந்தச் சூட்டிலேயே ஒரு தண்மையும் வலியிலேயே ஓர் இதமும் இருப்பதை அவள் உணர்ந்தாள். அவன் வாக்கிலே உண்மையும் பிடியிலே அன்பும் இருப்பதுதான் இதற்குக் காரணம் என்று தெளிந்தாள்.

இவர்களுடைய இந்த நட்பும் பேச்சும் கனகத்துக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. எப்படியோ பார்த்திபன் பணம் பிடுங்கத்தான் வந்திருக்கிறான் என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் ஆழப் பதிந்து விட்டது. பிரமீளாவைக் கல்யாணம் செய்து கொண்டு அவளையும் அவள் பணத்தையும் ஆளலாம் என்ற நோக்கத்தில்தான் அவன் அடிக்கடி வருகிறான் என்று நினைத்தாள். பிரமீளாவுக்கு அவனிடம் ஈடுபாடு அதிகமாக ஆக அவளுக்குக் கிலி பிடித்துக் கொண்டது. தன்னுடைய ஆதிக்கத்திலிருந்து இத்தனை செல்வமும் போய் விடுமோ என்று அவள் பயந்தாள்.

அவன் வருவதும், பேசுவதும், இருவரும் சேர்ந்து 'நைட் ஷோ'வுக்குப் போவதும் தனக்குப் பிடிக்கவில்லை என்று வெளிப்படையாகவே சொன்னாள். ''பேப்பரில் போடுவாங்க. சந்தி சிரிக்கும்'' என்று மிரட்டினாள். ஆனால் அவள் கூறியதை மட்டுமின்றி அவளையேகூட அவர்கள் அலட்சியம் செய்தார்கள். தன்னை ஒரு துரும்பாக மதித்து அவர்கள் ஒதுக்கியது அவள் பீதியை அதிகமாக்கியது. பிரமீளாவிடம் தனக்கு இருந்த ஒரு செல்வாக்கு இப்படி நிமிஷமாகக் கரைந்து போகக் கூடும் என்றால் அவள் பணத்தின் மீது தனக்குள்ள ஆதிக்கம் பட்டென்று விட்டுப்போய்த் துண்டித்து விழ எத்தனை நாளாகும்?

அவள் காரசாரமாகவே பேச ஆரம்பித்தாள். அவன் இல்லாதபோது பிரமீளாவிடம் அவன் அயோக்கியன் என்றும், வஞ்சகன் என்றும் திட்டித் தீர்த்தாள். அவன் வந்திருக்கும்போதும் அவன் காதுபடவே தன் அதிருப்தியை வெளியிட்டுக் கொண்டாள். ''என்ன தம்பி? ஒவலுக்கு டயம் ஆயிடுச்சா? கொண்டு வரவா? ராத்திரி சாப்பாடு கொட்டிக்க இன்னும் ஒரு மணி நேரம் பாக்கி இருக்கே? அடுத்த அரை மணி அடிக்கறச்சே என்ன சாப்பிடறீங்க? பாதம் கீரா? இல்லே, கிரேப் ஜூஸா?'' என்று கேட்டாள் ஒரு நாள். அப்போது பிரமீளா அந்த அறையில் இல்லை.

''இந்தாங்கம்மா! இங்கே ஏன் நேரத்தை வீண்டிச்சுக்கிட்டு நிக்கறீங்க? போய் இரும்புப் பெட்டியைத் திறந்து பணத்தை எண்ணிப் பாருங்க. நூறோ இருநூறோ குறையப் போகுது'' என்றான் பார்த்திபன்.

''அப்படி ஏதாவது குறைந்தால் அது உன் பாக்கெட்டுக்குத்தான் போயிருக்கும்'' என்றாள் கனகம்.

''ஏய் பணப் பிசாசு! நாவை அடக்கிப் பேசு!'' என்று எரிந்து விழுந்து விட்டு எழுந்து போக முற்பட்ட பார்த்திபனின் பாதங்களை மென்மையான இரு கரங்கள் பற்றின.

சம்பாஷணையின் கடைசிப் பகுதியைக் கேட்டுக் கொண்டே வந்துவிட்ட பிரமீளா, ''அம்மாவுக்காக நான் மன்னிப்புக் கேட்கிறேன், உட்காருங்கள்'' என்று கெஞ்சினாள்.

(தொடரும்)

## தெரிந்த விளையாட்டு: தெரியாத விவரம்

### 10. செஸ்



- யாருக்கும் செஸ் உதயமான நாள் தெரியாது. ஆனால் பழங்காலத்தில் அராபியர்கள் பாரசீகர்களிடமிருந்து இந்த விளையாட்டைக் கற்றுக் கொண்டார்கள் என்பதற்கு ஆதாரம் இருக்கிறது. பதினெட்டாவது நூற்றாண்டில் ஸ்பானிய வியாபாரிகள் இந்தச் செஸ் விளையாட்டை ஐரோப்பாவுக்குக் கொண்டு சென்றார்கள்.

- செஸ் விளையாட்டில் ஷா (ராஜா) முக்கியமான இடம் வகிக்கிறது. செஸ் விளையாட்டுச் சட்டப்படி 'ஷா'வை மடக்கிப் (trap) பிடித்து விட்டால் வெற்றி பெற்றதாக அர்த்தம். ஓர் அராபியன் எதிரியோடு ஆடும்போது தோற்கும் நிலை அடைந்து ஷாவை இழந்தால் ''ஷா மட்!'' - (மன்னன் இறந்தான்) என்று அழுவாரும். ஸ்பானிய மொழியில் அது xaque-mate ஆயிற்று. அதுவே ஆங்கிலத்தில் checkmate ஆயிற்று.

— குண்டுமணி

படம்: ரஷ்ய உலக சாம்பியன் போரிஸ் ஸ்பாஸ்கை.



# நா. பார்த்தசாரதி

எழுதும்

புதிய சமூக நாவல்

# சத்திய வெள்ளம்





# கல்கி

9.7.72 இதழில்

ஆரம்பமாகிறது



# விளக்குகள் எரியட்டும்

நகைச்சுவை நாகலிங்கம்




செட்டியாருக்குச் சமீப காலமாக ஓர் ஆசை. அது அவருடைய தகுதிக்கு மீறிய ஆசைதான். அதனாலேயே அதை எவரிடமும் வெளியிடும் துணிவு அவருக்கு ஏற்படவில்லை.

செட்டியார் என்றதுமே மொட்டைத் தலையும், கொட்டை ருத்ராட்சமும், அழகாய்ச் சரிந்த தொப்பையுமாக, அமைந்த ஏதாவது பொம்மைச் செட்டியாரை நினைத்துக் கொள்ளக் கூடாது.

நம் செட்டியாருக்கு அரசாங்க உத்தியோகம். ஒழுங்காய்ப் படிக்காமல் ஊரைச் சுற்றிய அந்த நாளில் யாரோ புண்ணியவான் இவரை ஓர் ஆபீசில் பியூனாக இழுத்துவிட்டார். அவரும் காலப்போக்கில் அட்டெண்டராகி விட்டார். இரண்டு பதவிகளுக்கும் இடையில் பிரமாத வித்தியாசமில்லை. ஐந்து ரூபாய் அதிகச் சம்பளமும், சாய்மான வசதியுமே வித்தியாசம். பியூனுக்கு ஸ்டூல் ஆசனம். அட்டெண்டருக்கு நாற்காலி உண்டு.

செட்டியார் குள்ளம்தான். நாலு முழ வேஷ்டியும், முழங்கையைத் தொடும் அரைக் கைச் சட்டையும். காலில் தோல் செருப்பு. செருப்பாய் உழைப்பதாய்ச் சொல்கிறார்களே, அவர்கள் உதாரணம் காட்டச் செட்டியாருடைய செருப்பை எடுத்துக் கொள்ளலாம் — திருப்பிக் கொடுத்துவிடுவதாக உத்தரவாதம் அளிக்கும் பட்சத்தில். அவருடைய கல்யாணத்தில் காசிக்குப் போகாமல் தடுத்தாட்கொண்ட மாமனார் மகானுபாவன் கொடுத்த குடைதான் இப்போதும் வெயிலுக்குத் தாங்குகிறது. மழைக்கு அதை வெளியிலேயே எடுக்க மாட்டார். மழை நாளில் தெருவில் நடக்கும் போதும் வீட்டில் இருக்கிற உணர்வை ஏற்படுத்தக்கூடிய குடை அது. வீடானால் ஒழுகுகிற இடங்களில் பார்த்துப் பார்த்துப் பாத்திரங்களை வைக்கலாம். ஒழுகும் குடையில் என்ன செய்வது?

வாலிப வயசில் வாட்ட சாட்டமாக—வறுமை அவருடைய உடன் பிறப்பு; எனவேதான் வாட்டத்தையும் சேர்த்துச் சொல்ல வேண்டியிருக்கிறது — இருந்திருப்பார் போலும். தற்போது, காற்று குறைந்த பலூனாய், இரும்பு குண்டு நகங்கின மாதிரி சரீரம் சற்றே தளர்ந்திருக்கிறது. ஆறு குழந்தைகளின் தகப்பன் என்பதால் அவருடைய மற்ற அங்க லட்சணங்களை விவரிப்பதில் சுவாரசியம் இருக்காது. ஆகவே ஆரம்பத்தில் குறிப்பிட்ட அவருடைய ஆசைக்கு வருவோம்.

என்றைக்காவது ஒரு நாள் ஜாஸ் இசை முழங்கும் பிரும்மாண்டமான ஹோட்டலில் நுழைந்து, ஏர்-கண்டிஷன் அறையில் அமர்ந்து இஷ்டத்துக்கு மண்ட வேண்டும்; பானுவிஷன், பனுரமா தியேட்டரில் ட்ரெஸ் சர்க்கிளில் கால் மீது கால் போட்டு அமர்ந்து சினிமாப் பார்க்க வேண்டும்; அதி அற்புத அழகி ஒருத்தி அவரிடம் பேசக் கூடவேண்டாம், அவரைப் பார்த்து இலேசாக முறுவலித்தாலும் போதும்; இன்னும் காரில் போக வேண்டும்; விமானத்தில் பறக்க வேண்டும்; வெளி




நந்தினி

நாடுகளை யெல்லாம் சுற்றிப் பார்க்க வேண்டும் என்பதெல்லாம் அவருடைய ஆசையில்லை.

அவருடைய ஆசை என்ன தெரியுமா? உள்ளூர் சிவன் கோவிலுக்கு ஒரு ட்யூப் லைட் வாங்கிப் போட வேண்டும் என்பதுதான்! அது ஆசைதான்; பிரார்த்தனை அல்ல. அந்த ட்யூப் லைட்டில் செட்டியார் பெயர் இருக்காது. யார் வாங்கிக் கொடுத்தார்கள் என்பது யாருக்குமே தெரியாது. ட்யூப் லைட்மட்டும் இறைவன் திருக்கோயிலை அலங்கரிக்கும். அவருக்கு அப்படி ஓர் எண்ணம் சில நாட்களாக.

இம்மாதிரி அவர் நினைக்க நேர்ந்தது ஏன்? கோவில் பிரதான வாசலை நெருங்கும்போதே கொட்டை கொட்டையாகச் சிவப்பு வெளிச்சத்தில் 'சிவ சிவ' என்றும் மற்றொரு பக்கத்தில் பச்சை வெளிச்சத்தில் 'ஓம் சக்தி' என்றும், வேறொரு வாசலில் 'ஹரஹர' என்றும் எழுத்துக்கள் கண்களைக் கொத்தின. அருகில் நெருங்கியதும், 'ஜவுளிக் கடை ஜம்புலிங்கம் தருமம்' 'நகைக் கடை நாகலிங்கம் தருமம்' 'பூக்கடை புருஷோத்தமன் தருமம்' என்ற எழுத்துக்களும் பளபளத்தன; இவை தவிர ஒவ்வொரு ட்யூப் லைட்டிலும் 'வட்டிக் கடை வாசீசன் தருமம்', 'பொட்டிக்கடை பொன்னுசாமி தருமம்' 'கஜேந்திர மோட்சம்(ஓட்டல்) கணபதி தருமம், 'மளிகைக் கடை மன்னுர் சாமி....' என்று எழுத்துக்கள் பளிச்சிட்டன.

செட்டியார் பிறந்தது முதல் தற்போது உத்தியோகம் பண்ணிக் குப்பை கொட்டும் வரை அதே ஊரில்தான். எத்தனையோ காலமாக அவரும் அந்தக் கோவிலுக்கு வந்து போய்க் கொண்டிருந்தார். ''சீ! என்ன மனுஷங்க! சுவாமி சந்நிதியிலும் சுய விளம்பரம். தருமமாம்! கடவுளுக்கு இவர்கள் என்ன தர்மம் செய்வது?'' என்று புதுமையாகச் சிந்திக்கத் தொடங்கினார்.

ஒரு நாள் அவருக்கு அந்த எண்ணம் தோன்றியது. இந்த 'தர்ம லிங்கங்களை'க் கேலி செய்கிற மாதிரி நாமும் ஒரு ட்யூப் லைட் வாங்கிப் போட்டால் என்ன? வெறும் ட்யூப் லைட். கொடுத்தவர் பெயர் தர்மகர்த்தாவுக்கு மட்டுமே தெரியும். ஆமாம், அப்படிச் செய்தால்தான் மனத்துக்கு ஆறுதலாக இருக்கும்.

அடுத்த நாள் அவர் சீக்கிரமாக ஆபீஸ் வேலையை முடித்துக் கொண்டு கடைத் தெருவுக்கு வந்தார்.

ட்யூப் லைட் வாங்க வேண்டிய அவசியத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்ட கடைக்காரர் ''கோவிலுக்கு வாங்கிக் கொடுக்கிறதா இருந்தால் பெரிசுதான் சரி. எல்லாமாச் சேர்ந்து இருபத்தெட்டு ரூபாய் ஆகும். எடுக்கட்டுமா?'' என்றார். ''இருக்கட்டும். விலை தெரிஞ்சுக்கத்தான் கேட்டேன். பிறகு வருகிறேன்'' என்றார் செட்டியார்.

கோவில் சுற்றும்போது அவர் கட்டிட என்ஜினீயரைப் போல் கோவிலின் எல்லா இடங்களையும் வெறித்துப் பார்த்தார். ''என்ன பார்க்கிறீங்க?'' என்றார் குருக்கள் விபூதி கொடுக்கும்போது. ''இல்லை, இந்த நவக்கிரகத்துக்கிட்ட ஏதோவொரு பல்பு அழுது வழியறதே, ஒரு ட்யூப் லைட் போட்டா வெளிச்சமா இருக்காதான்னுதான்...''

''நீங்க வேறே சார். இந்த லைட் எரியற துக்கே தர்மகர்த்தா கரண்ட் சார்ஜ் ஏகத் துக்கு ஆயிடறதுன்னு கத்தறார். பக்தர் கூட்டம் குறையற நேரம் பார்த்து விளக்கை அணைக்கவேன்று வேலைக்காரனைக் கோவிக்கக் கறார்....''

தெருவில் போகும்போது செட்டியார் யோசித்தார்: 'ஏதேது, இறைவன் சந்நிதிக்கு என்று ஆசைப்பட்டு விளக்கு வாங்கிக் கொடுத் தாலும் இவர்கள் ஏதேதோ காரணம் சொல்லி அதை ஒழுங்கா ஏற்ற மாட்டார்கள் போலிருக்கிறதே! இனமும் அந்த லைட்டை எரிக்கிறார்களா என்று பார்க்க வேண்டும். இல்லாவிட்டால் சண்டை பிடிக்கவேண்டும்.'

அடுத்த நாள் கோவிலுக்குப் போகும் போது அவர் குருக்களைக் கேட்டார்: ''ஏன் ஸ்வாமி, லைட்டை எல்லாம் வாங்கிக் குடுக்க றீங்களே, இவங்க லைட்டை இங்கே இங்கே மாட்டணும்னு அவங்களுக்குள்ளே ஏதாவது உடன்பாடு உண்டா?''

''ஐயோ! அதை ஏன் கேக்கறீங்க? மண்டை உடையும். அவங்களைச் சமாதானப்படுத்தற துக்குள்ளே நீங்க லைட்டும் போட வேண்டாம், ஒண்ணும் வேண்டாம். போயிட்டு வாங் கன்னு சொல்லிடலாம்னு தோணும்.''

''ஓகோ, அப்படி ஒரு தகராறு இருக்கா? உம், நம்ம கிட்ட யாரு சண்டைக்கு வரு வாங்க? தர்மகர்த்தா தெரிஞ்ச மனுஷன். கிட்டப் போய், 'என்னய்யா விவகாரம்? போங்கய்யா அந்தண்டை!' என்று அவர் சத்தம் போடலாம்...'' என்று எண்ணியபடி வலம் வந்தபோது—

''ஐயோ, வலி தாங்கலியே, உயிர் போகுதே!'' என்று முனகியபடி ஓர் இளம் பெண் வர, அவளைத் தாங்கிப் பிடித்தபடி வந்த முதியவள், ''சீ, இந்தக் கோவில்காரங் களுக்கு மூளையே கிடையாது. கண்ட இடங் களிலே கண்ணைப் பறிக்கற மாதிரி லைட் போட்டு வெப்பாங்க. வேணும்கற இடத் துலே போட மாட்டாங்க. பொறுத்துக்க அம்மா. மந்திரிக்கிற அய்யர் வீடு கிட்டத் திலேதான், போயிடுவோம்...'' என்றாள்.

''என்ன ஆச்சு?'' என்று வினவினார் செட் டியார்.

''தேள் கொட்டிட்டுதுங்க. இதுக்குத் தான் நான் கோவிலுக்கு வந்தால் பிராகாரத் தைச் சுத்தாமப் போயிடறது. இருளோன்னு இருக்கேடி அம்மான்னேன். இந்தப் பொண் அடம் பிடிச்சுது. கோவில்லே வந்து என்ன பயம்னுது. நீங்க பார்த்துப் போங்க...'' என்றாள் அவள்.

'த்சொ, த்சொ! என்ன பரிதாபம்! இந்த இடத்துக்குத்தான் லைட் போடணும். பக் தர்கள் எல்லாம் சுத்தாமலே போயிட்றாங் களாமே? ஒரு லைட் போட்டால் எவ்வளவு வசதியா இருக்கும்? பக்தர்கள் பயமில்லாமல் சுத்தவும் முடியும். சுத்தாம வீடு திரும்பற மேன்னு சஞ்சலப் படாமயும் போக முடியும். சரி, நம்ம லைட்டைப் போட வேண்டிய இடம் இதுதான். இறைவன்தான் தொண்டர் உள் ளத்து ஒடுக்கமாச்சே? அவனுக்குச் செஞ்சா என்ன, அவன் பக்தர்களுக்குச் செஞ்சாம் என்ன?

'அது சரி, இருபத்தி எட்டு ரூபாயாச்சே, அதற்கு எங்கே போவது? திருடவா முடியும்? சிறுகச் சிறுகச் சேமிக்கத்தான் வேணும்!'

செட்டியார் கணக்குப் போட்டார். மாசம் ரெண்டு ரூபா மேனிக்குச் சேர்த்தாக்கூடப் பதினாலு மாசம் ஆச்சு. அடேயப்பா! அவ் வளவு காலம் பொறுமையா எப்படி இருக் கிறது! அதுவரைக்கும் லைட் விலையும்தான் ஏறாமல் இருக்குமா? உடனடியா இரண்டொரு மாசத்திலே பணம் வருகிற மாதிரி வழி ஒண்ணும் இல்லையா?

''என்ன செட்டியார், கோவிலுக்குப் போயிட்டுப் போறீகளாக்கும்?'' என்று கேட்டுவிட்டுப் போய்க்கொண்டே இருந்தார் அம்பலவாணம். அவர் ஓர் ஆசிரியர். அவர் பையனுக்குச் செட்டியார் சிபாரிசில் வேலை கிடைத்தது.

'உக்கும்' என்று முனகிய செட்டியாரின் மனம் பலவிதமாய்க் கிளை படர விட்டது. இவரைக் கேட்டால் சில இடங்களில் டியூஷன் கிடைக்கும். அதைக் கொண்டு... ஆமாம்! ஆபீசில் இருந்து திரும்பும்போதே நம் கட்டை சோர்ந்து போகிறது. அதுக்கு மேலே டியூஷன் எடுக்கற மாதிரிதான் இருக்கப் போவுது. அவரும்தான் உடனே பார்த்துக் கொடுத்து விடுவாரா?. பார்க்கிறேன் என்பார். 'என்ன செட்டியார் இண்டலா? எனக்கே ரெண்டு டியூஷன் கிடைக்காதான்னு நினைச்சுக்கிட்டி ருக்கேன்' என்றும் அவர் பல்லைக் காட்டலாம். விட்டுத் தள்ளு. உருப்படாத யோசனைகள்.

காலில் திடீரென்று ஏதோ தட்டுப்பட வேண்டுமாம். குனிந்து பார்த்தால் ஒரு பொட்டலமாம். சின்னப் பசங்க விளையாட் டாகக் கட்டிப் போட்ட மணல் பொட்டல மாக இருக்கலாம்னு நெனைச்சுப் பிரித்துப் பார்த்தா...கடவுளே, அதிர்ஷ்டமே அதிர்ஷ் டம்! மூணு புத்தம் புது நோட்டு. (பழ சாய்த்தான் இருக்கட்டுமே, கை கூசுமோ!) சிச்சி, பாவம். எவனாவது கைதவற விட்டு வயிறெரியக்கூடிய பணம் நமக்கு எதற்கு?

இல்லேன்னு, காலையிலே பேப்பரைப் பார்த் ததும் தலைப்புச் செய்தி: 'கிராக்கிப் படி உயர்த்தப்பட்டது. பதினொன்று ரூபாய்.. சென்ற மாதத்திலிருந்து அமுலுக்கு வரு கிறது. வரும் முதல் தேதி சேர்த்துப் பெற் றுக்கொள்ளலாம்.' உடனே ட்யூப் லைட்தான்! ஊஹூம்! இதுவும் சரிப்படாது. அக்கம் பக்கத்தில் செய்தி அடிபட்டு 'அவள்' அந்த இருபத்தெட்டு ரூபாய்க்காகத் தயாராகக் காத்திருப்பாள், ஏதோ ஒரு செலவைச் சொல் லிக்கொண்டு.

ஏதாவது அற்புதம் நிகழாதா! எவனாவது இருபத்தெட்டு ரூபாய் கொடுக்க மாட்டானா!

ஏதேதோ எண்ண வெள்ளத்தில் நீந்தி அவர் வீடு போய்ச் சேர்ந்து, சாப்பிட்டேன் என்று பேர் பண்ணி, வழக்கம்போல் கட்டை யைக் கிடத்த எதிர் வீட்டுத் திண்ணைக்குப் போனார்.

''வாங்க, இன்னிக்கு லேட் போலே யிருக்கு?'' என்று வரவேற்றார் இவருடைய தூக்க சகா. அவருக்கு ஆஸ்பத்திரியில் வேலை.



''காலிங் பெல் ரிப்பேர் என்றுயே! அத ஞலே, காலில் பெல் கட்டிக்கிட்டேன்!''

தூக்கம் வரும்வரை இரண்டு பேரும் ஏதேதோ பேசிக் கொண்டு கிடப்பார்கள்.

பேச்சோடு பேச்சாகச் செட்டியார் தம் ஆசையை வெளியிட்டார். ''இவ்வளவு தானே?'' என்று கேட்டுவிட்டு நண்பர் எழுந் தமர்ந்து, 'சர்' என்று பொடி போட்டார். அவர் கேட்டதைப் பார்த்தால், ''நானும் இதே மாதிரிதான் ரொம்பக் காலமாக நினைத் துக்கொண்டிருக்கிறேன். நான் போட்டால் என்ன, நீர் போட்டால் என்ன? நாளைக்கு முதல் வேலேயாக முப்பது ரூபாய் தருகிறேன். என் சார்பில் நீரே லைட் வாங்கிக் கொடுத்து விடலாம்'' என்று சொல்வார் போலிருந்தது.

ஆனல், ''உமக்கு எத்தனை குழந்தைகள்?'' என்று அவர் கேட்டதும் செட்டியாருக்குச் சப் பிட்டுவிட்டது. ''அந்த இழவெல்லாம் போன வருஷமே ஆயிடுத்து'' என்று முனகினர்.

''சரி. இன்னெரு வழி. நீர் தெம்பும் திடமு மாகத்தானே இருக்கிறீர்? ரத்தம் குடுக்க லாமே?''

''பேஷ், பேஷ்!'' என்று உற்சாகமாக எழுந்து அமர்ந்தார் செட்டியார். ''இப்போ 'ப்ளட் பாங்க்' திறந்திருக்குமோ? சரி, காலேயில் பார்த்துக் கொள்ளலாம். இந்த விஷயம் அவளுக்குத் தெரிய வேண்டாம்.''

''சேச்சே! காலேயில் முதல் வேலே அது தான். பொழுது விடிந்ததும் உம்ம மிஸஸைப் பார்த்துச் சொல்லிவிட்டுத்தான் மறுவேலே!'' என்று தூக்கசகா விளையாட்டாக மிரட்டினர்.

''என்ன செட்டியார், லைட்டில் பேர் கீர் ஒண்ணும் எழுதவில்லேயே?'' என்று கேட்டார் தர்மகர்த்தா.

''எனக்கு அதெல்லாம் பிடிக்காது. சும்மா மாட்டிடுங்க போதும்'' என்றுர் கம்பீரமாக.

''சிவராமா! செட்டியார் விளக்குக் கொண்டு வந்திருக்கார். எங்கே மாட்டணும்? கேட்டு மாட்டு'' என்றுர் தர்மகர்த்தா.

''என்னங்க, விளக்கை எங்கே போடட் டும்? பூக்கடைக்காரர் விளக்கு ஃப்யூஸாப் போச்சு. அங்கே போடவா?'' என்று கேட் டான் சிவராமன்.

செட்டியாருக்கு முன்பொரு சமயம் பிரா காரத்தின் பக்கம் விளக்குப் போட வேண்டும் என்று தீர்மானித்தது நினைவு வந்தது. இருந் தாலும் அந்தச் சமயம் அதை நினைவுபடுத்திக் கொள்ள அவர் விரும்பவில்லே.

''நீ போடு. நான் சுத்திட்டு வந்துடறேன்'' என்று அவர் பிராகாரம் சுற்றப் போனர்.

''என்ன டிரஸ்டி சார்! நம்ம லைட்டு பீஸாப் போச்சுன்னு சிவராமன் வந்து சொல்லித்து. நாளைக்குப் போட்டுடறேன். பேர் எழுதறவன் இன்னிக்குத்தான் வந்து சேர்ந்தான் பெயிண்ட்—காயட்டும்னு பார்க் கிறேன்...'' என்றுர் அங்கு வந்த பூக் கடைக்காரர்.

வலம் வந்து கொண்டிருந்த செட்டியாரின் இதழ்க்கடையில் இகழ்ச்சிக் குறிப்பு. நாற் காலி மேல் ஸ்டூலைப் போட்டுக் கொண்டு ஏறி நின்று விளக்கைப் பொருத்திக்கொண் டிருந்த சிவராமனைப் பார்த்தார்.

செட்டியார் அடுத்த வலம் வந்தபோது அறங்காவலர் சொல்லிக் கொண்டிருந்தார்: ''ஒலகமே பெரண்டு போனலும் கோவிலுக்கு வரத் தவற மாட்டார். நல்ல பக்திமான். காதும் காதும் வைச்சாப்ல இன்னிக்கு ஒரு லைட் போட்டிருக்கார் பாருங்கோ, என்ன அடக்கம்கறேன்!''

செட்டியாருக்கு உச்சி குளிர்ந்து போயிற்று. ''என்னப்பனே! நமசிவாயம்! எல்லாம் உன் கருணை!'' என்று மூலஸ்தானத்தைப் பார்த் துக் கைகூப்பினர்.

''செட்டியார், லைட் போட்டாச்சு. சுவிட்ச் போடறேன் பாருங்க'' என்றுன் சிவராமன்.

''இதோ மூணுவது சுத்தை முடிச்சுட்டு வந்துடறேன்....'' விரைந்தார் செட்டியார்.

நாட்டுப்புறத்தான் மாதிரி உரத்துப் பேசி ஞர் பூக்கடையார். ''இதிலே அடக்கம் என் னங்க, அடக்கம்? எதுக்காவது பிரார்த்தனை பண்ணிக்கிட்டிருப்பாரு, மாட்டியிருக்காரு. அவரு அரசாங்க உத்தியோகஸ்தர். வர்றது வாய்க்கும் வயத்துக்கும் பத்தாம இருக்கற போது எப்படிடா ட்யூப் போட்டார்னு ப்ளர் பல விதமாகப் பேசுவாங்க. அதுக்குப் பயந்து அவர் பெயிண்ட் செலவை ஒதுக்கிட் டாரு. ஒங்க நல்ல மனசு எல்லாத்தையும் ஓத்தி வெச்சுப் பார்க்குது....''

செட்டியார் கண் முன் உலகம் இருண்டது. செவி அருகே யாரோ கலகலவென்று உரத் துச் சிரித்தார்கள். எந்த விஷயத்துக்கும் இரண்டு பக்கங்கள் உண்டு என்பதை அவர்தான் மறந்து விட்டார்.

''அடப் பாவிகளா! தோணித் துலங்கிச் செட்டியார் லைட் போடறாரு. அந்த நேரம் பார்த்துக் கண்ணை அவிச்ச மாதிரி ஊர் பூரா சப்ளையை நிறுத்திட்டாங்களே! செட்டியார் இருங்க, இதோ லைட் வந்துடும். பார்த் துட்டுப் போகலாம்!'' இருட்டில் சிவராமன் குரல் கொடுத்தான்.

அவர் இருக்கவில்லே. இருட்டிலேயே வெளி யேறிப் போய்க் கொண்டிருந்தார். அவ ருடைய மன இருளுக்கு இறைவன் விளக்குப் போட்டுவிட்ட பிறகு அவருடைய விளக்கு எரிந்தால் என்ன, எரியாவிட்டால் என்ன?

# அழகு சொட்டும் தொட்டுணர்வு

# ஹேஸ்லீன் ஸ்னோ



தலைசிறந்த அழகு
சாதன ஸ்னோவான
ஹேஸ்லீன், உங்கள்
மாந்தளிர் மேனிக்கு
மென்மையப் பராமரிப்பு
வழங்குகிறது.
லேசாகவும் மிருதுவா-
கவும் விளங்கும்
ஹேஸ்லீன் ஸ்னோ,
சீராகப் பரவி, உங்கள்
மேனியைப் பாதுகாத்து,
சருமத்தை நன்கு
பராமரிக்கிறது.
உங்கள் மேனி குற்றங்
குறையின்றி முற்றும்
இளமையுடன் வனப்-
போங்கி விளங்க,
நித்தமும் உபயோகி
யுங்கள் இதை.
இளமையான இயற்கை
எழிலின் இரகசியம்,
ஹேஸ்லீன் ஸ்னோ.




SHB-8295 TM

## மங்கிய முகத்தில் மகிழ்ச்சி பொங்கிட பாரி மிட்டாய்கள்

எத்தகைய மன நிலையையும் மாற்றிட வல்லது பாரி மிட்டாய். புதிய, முழுமையான, சுவை மிருந்தவை பாரி மிட்டாய்கள். அதன் முதல் சுவையே தனி இன்பம்.




பாரிஸ்
கன்பெக்ஷனரி
லிமிடெட்,
சென்னை

*AS/6344




# ஆருயிர் சீதா

**• கஸ்தூரி பஞ்சு •**

**வ**ழக்கம்போல் காலை ஏழரை மணிக்குப் பொழுது விடிகிறது மாதவனுக்கு. கண்ணைக் கசக்கிக் கொண்டு படுக்கையை விட்டு எழுந்து பல் தேய்த்துக் காப்பி அருந்தியபடியே அன்றையப் பத்திரிகையைப் புரட்டுகிறான்.

பேப்பரைப் பிரித்து, இரண்டாவது பக்கத்திலுள்ள விளம்பரப் பகுதியில் கண்ணோட்டத்தைச் செலுத்துகிறான். விளம்பரப் பக்கத்தைப் பார்த்துக் கொண்டே வந்தவன் வழக்கம்போல் இன்றி, புதுவிதமாக 'வீல்' என்று அலறுகிறான். அவன் இதயம் 'படபட' வென்று குதிரைப் பந்தய மைதானத்தில் வின்னிங் போஸ்'ட்டை நோக்கி ஓடிக் கொண்டிருக்கும் குதிரையின் குளம்படிகளைப்போல் தடதடக்கிறது. மனக் கண்முன்னே, முதல் நாள் நடந்த நிகழ்ச்சி, சினிமாப் படமாகச் சுழல்கிறது.

கடற்கரையில் சந்தடி அதிகமில்லாத ஓர் ஒதுக்குப்புறத்தில் ஒரு பெண் உட்கார்ந்திருக்கிறாள். அவள்தான் சீதா. அவளது இளமைப் பொலிவு கைதேர்ந்த சிற்பி செதுக்கின சிற்பம் போல் இருக்கிறது. அவள் முகம்? - அதில் மலர்ச்சியை மட்டும் காணோம்.

''சீதா! உனக்கு ஏன் இப்படியொரு பிடிவாதம்? நம் கல்யாணத்தைப் பற்றிப் பேச இப்போது என்ன அவசரம்?'' என்று பரிதாபமாகக் கேட்டான் மாதவன்.

சீதாவின் அழகிய முகம் இறுகிற்று. ''இதோ பாருங்கள், இப்படித் திருட்டுத்தனமாக வந்து சந்திப்பதைவிடத் தற்கொலையே மேல் என்று தோன்றுகிறது. நீங்கள் உங்கள் பெற்றோர்களிடம் நம் அன்பைப் பற்றிச் சொல்லி நம் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யப் போகிறீர்களா இல்லையா?'' என்று கடுமையாகக் கேட்டாள்.

தொட்டிலில் படுத்துக் கொண்டு விரலைச் சப்பும் சின்னப் பாப்பாவாகத் தன்னை நினைத்துக்கொண்டிருக்கும் அம்மாவையும், கையில் சாட்டையுடன் சிங்கத்தின் கூண்டில் நிற்கும் சர்க்கஸ்காரனைப் போன்ற கொடுமைக்காரரான தந்தையையும் நினைத்துக் கொண்டதுமே, துண்டிக்கப்பட்ட பல்லியின் வாலைப் போல் அவன் உடம்பு ஒருமுறை பாதாதிகேசம்வரை துடித்து அடங்கியது. இந்த இருவரில் எவரிடம் போய்த் தன் காதலைத் துணிந்து வெளியிடுவது?

''சீதா! குறைந்தபட்சம் இன்னும் இரண்டு மாதங்களுக்காவது இந்தப் பேச்சை எடுக்க முடியாது'' என்றான் அழுத்தம் திருத்தமாக.

அவ்வளவுதான்; 'விருட்'டென்று எழுந்த சீதா, ''நீங்கள் உங்கள் சக்தியைச் சொல்லிவிட்டீர்கள் இல்லையா? இனி நான் என்னால் இயன்றதைச் செய்து கொள்கிறேன்'' என்று சொல்லிவிட்டு, 'விடுவிடெ'ன்று நடந்தாள்.

**ம**றுநாள் இப்படியொரு துக்கச் செய்தி காத்திருந்தது!

''ஐயோ, சீதா! உன்னைச் சமாதானப் படுத்தாமல் வந்துவிட்டதற்கு எனக்கு இவ்வளவு பெரிய தண்டனையைக் கொடுத்து விட்டாயே! என்னை ஒரேயடியாகத் தவிக்க விட்டு விட்டுப் போய்விட்டாயே!'' என்று அவன் வாய் விட்டு அழுததைக் கேட்டு, சமையலறையில் இருந்த அவன் அம்மா, அடித்துப் புரண்டு ஓடி வந்தாள்.

நெஞ்சம் பதைபதைக்க, ''மாதுக் கண்ணு! என்னடா... என்னஆச்சு?'' என்று கேட்டாள்.

## லெப்ட்...ரைட்...சிரிப்பு !

பிரெஞ்சு ராணுவ வீரன் ஒருவன், 'நாஜி'கள் காம்பில் இருக்கும்போது எழுதிய ஒரு கடிதம் இது: ''அப்பாவுக்கு, இங்கே நான் ரொம்ப சௌகரியமாக இருக்கிறேன். சாப்பாடு பிரமாதமாக இருக்கிறது. கவலையே இல்லாமல் சந்தோஷமாக இருக்கிறேன்.''



பின் குறிப்பு: மாமா ''பியரி'' நேற்று இங்குள்ள நிலைமைப் பற்றிக் குறை கூறியதால் சுட்டுக் கொல்லப்பட்டார். ●

இரண்டு பெண்மணிகளின் உரையாடல் :

''உனக்குத் தெரியுமா? வேண்டு மானால் பார்த்துக் கொள்ளேன். இன்னும் இரண்டே மாதங்களில் போர் முடிந்து விடும்.''

''எப்படிச் சொல்கிறாய் ?''

''என் மகன் இன்றுதான் ராணுவத்தில் சேர்ந்தான். அவன் எந்த வேலையிலுமே இரண்டு மாதங்களுக்கு மேல் இருந்ததில்லை!'' ●

ராணுவத்தினருக்கு ரத்த தானம் செய்ய வந்திருந்த ஒரு ஹாலிவுட் நடிகர் சொன்னார்: ''எல்லா ரத்தத்தையும் எடுத்துக்கொண்டு விடாதீர்கள். வருமான வரி அதிகாரிகள் உறிஞ்சுவதற்காகக் கொஞ்சம் பாக்கி இருக்கட்டும் !'' ●

தொகுப்பு: 'முரளி'

'The Pocket Book of War Humour' என்ற நூலிலிருந்து

---

தலைக்கு மேலே சாண் போன பிறகு முழத்தைப் பற்றி என்ன கவலை என்கிற வேதாந்த உணர்வுடன் விஷயங்களை யெல்லாம் மடமட வென்று கொட்டினான் மாதவன்: ''நம்பர் 15, நாமகிரிப்பேட்டைத் தெரு, சீதாலக்ஷ்மி, வயது 18.... விடியற்காலை மூன்று மணிக்குக் காலமானாள்'' என்று தினசரியில் போட்டிருந்த அந்தப் பகுதியைச் சுட்டிக் காட்டி விட்டு, மீண்டும் கேவினான்.

''அடப் பாவி! காரியத்தைக் கெடுத்தாயேடா! உனக்குச் சீக்கிரமாக ஒரு கல்யாணத்தைப் பண்ணி வைச்சுடணும்னு ஒரு வருஷமாகவே எனக்கு ஆசை அடித்துக் கொண்டிருக்கிறது. கேட்டால் நீ முரட்டுத்தனமாக மறுத்துவிடப் போகிறாயே என்கிற பயத்தில் பேசாமலேயே இருந்தேன். உன் அப்பாவுக்கும் இதே எண்ணம்தான். உன் மனத்துக்குப் பிடித்தவளை மணம் செய்து வைக்கத் தடையா சொல்லி யிருப்போம்? நீ ஒரு கோடி காட்டியிருந்தால்கூடப் போதுமே? நானும் அப்பாவும் 'ஜாம் ஜாம்' என்று பரிசத்துடன் பெண் கேட்கப் புறப்பட்டிருப்போமே! இதோ பார், இந்தச் சங்கிலிகூட அதற்காகத்தான் செய்து வைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்று சொல்லிக் கைப்பிடிப் பருமனுள்ள மூன்று வடச் சங்கிலியைக் கழற்றி அவனுக்குக் காண்பித்தாள்.

'அம்மா அப்பாவின் மனநிலையைப் பற்றிக் கொஞ்சமாவது தெரிந்து கொண்டிருந்தால் ஆருயிர் சீதாவை அகால மரணத்துக்கு ஆளாக்காமல் இருந்திருக்கலாமே?' என்று எண்ணி மனம் உடைந்தான் மாதவன்.

அந்தச் சமயம் வாசலில் காலடியோசை கேட்டது. திரும்பிப் பார்த்தான். அவன் நண்பன் வாசு உள்ளே வந்தான். வாசு, சீதாவின் வீடு இருக்கும் வீதியான நாமகிரிப் பேட்டைத் தெருவிலேயே அவன் வீட்டுக்கு மூன்றாவது வீட்டில் வசிப்பவன்.

பத்திரிகையில் வந்துள்ள செய்தி 'பொய்' என்று அவன் சொல்லிவிட மாட்டானா என்கிற நப்பாசையுடன் ''வாசு, உனக்கு மூன்றாவது வீட்டில் அதாவது 15ம் நம்பரில் சீதா என்று ஒரு பெண்....'' என்று மாதவன் ஆரம்பித்ததுமே, ''அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறாய்? கண்ணாவிச் சாவு போயேன்'' என்று வாசு தலையில் அடித்துக் கொண்டான். கொஞ்சம் நஞ்சம் ஒட்டிக் கொண்டிருந்த நம்பிக்கையும் அடியுடன் இற்றுவிழ, துவண்டு போனான் மாதவன்.

வாசு மேலே பேசிக்கொண்டே போனான். ''மாது! இந்தச் சாவினால் எனக்குத் தண்டனை நூறு ரூபாய்! என் கையிலோ பைசா கிடையாது. நீதான் பெரிய மனசு பண்ணி ஒரு நூறு ரூபாய் கைமாற்றாகக் கொடுக்கணும்.''

மாதவனுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. அவனை அடித்து நொறுக்க வேண்டும் என்று ஆத்திரம் பீறிட்டெழுந்தது.

''முதல்லே வெளியே போடா! பைசா பெயராது.''

''டேய்! டேய்! அப்படிச் சொல்லாதேடா. அந்தப் பதினைந்தாம் நம்பர் வீட்டுச் சாவைப் பற்றிய விளம்பரச் செய்தியை என் மூலமாகத் தான் பத்திரிகைக்குக் கொடுத்து அனுப்பினார்கள். என் போதாத காலம் 81 வயது என்பதற்குப் பதில் 18 வயது என்று எழுதிக் கொடுத்து விட்டேன். அதை மாற்றிப் பிரசுரிக்கக் கொடு என்று என்னைப் பிடித்து அவர்கள் உலுக்கி எடுக்கிறார்கள். ஒரு சின்னத் தப்புக்கு...'' என்று அவன் முடிப்பதற்குள் மின்சாரம் பாய்ந்தவனைப் போல் துள்ளினான் மாதவன். வாசுவைப் பிடித்து ஒரே கட்டாகக் கட்டிக் கொண்டான், மகிழ்ச்சியால்.

'எனக்கு என் பாட்டியின் பெயரைத்தான் வைத்திருக்கிறார்கள்' என்று எப்போதோ சீதா சொன்னது இப்போது மாதவனின் காதில் துல்லியமாக ரீங்காரமிட்டது. ஆறு மாதங்களாக இழுத்துப் பறித்துக் கொண்டிருந்த அந்தக் கிழவி சீதாதான் மண்டையைப் போட்டு விட்டிருக்கிறாள்!

''வாசு! நீ செய்தது சின்னத் தப்பில்லேடா. பெரிய உதவி!'' என்று மாதவன் ஆர்ப்பரித்ததைப் புரிந்துகொள்ள இயலாத வாசு பயந்து போனான்.

''மாது... மாது.... நீ பணம் கொடுக்கா விட்டாலும் பரவாயில்லே...'' என்று நடுங்கிய வாசுவின் வாயை இறுகப் பொத்தினான் மாதவன். ''பணம் கொடுக்காமலிருப்பதாவது? நீ செய்துள்ள நன்மைக்கு உனக்குக் கனகாபிஷேகம் அல்லவா செய்ய வேண்டும் நான்? என் அம்மாவுக்கு விஷயத்தைத் தெரிவிப்பதற்காகவே ஏற்படுத்தப்பட்ட சந்தர்ப்பமாக இதை அமைத்துக் கொடுத்து விட்டாயே...'' என்று கூறி, கையில் மாதவன் திணித்த நூறு ரூபாய் நோட்டையே வெறித்துப் பார்த்துக் கொண்டு வாசு பிரும்மமாக நின்று கொண்டிருந்தான்!

# ப்ரூ,பெரிதும் விரும்பப்படுவது ஏன்?

# "ப்ரூதான் ஸ்ட்ராங் தன்மை மற்றும் காபிச்சுவையுடன் மணத்தையும் பெற்றிருக்கிறது."




ப்ரூ-அதி நேர்த்தியான ஸ்ட்ராங்கான இன்ஸ்டண்ட் காபி-விலையும் எவரும் கொடுக்கக் கூடியது

O&M 25828/2 TAM

# பார்லே க்ளூகோ– போஷாக்கு நிரம்பிய அதிக ருசியுள்ள பிஸ்கெட்



எப்பொழுதும்
இவை அடங்கியது–
வைட்டமின்கள் ஏ-டி-பி$_1$-பி$_2$-
கால்ஷியம்-ப்ரோடீன், பால்,
கோதுமை, சர்க்கரை,
க்ளூகோஸ்




everest/306g/PP tam

## பார்லே க்ளூகோ பிஸ்கெட் புசித்து வளர்வதே பேரானந்தம்!

இந்தியாவின் மிக அதிகமாக விற்பனையாகும் பிஸ்கெட்டுகள் பார்லே க்ளூகோ

# தொழில் துறையில் சுணக்கம்

இன்றைய பிரச்னை 10

**கடந்த சில வருடங்களில் தொழில் துறையில் முதலீடு செய்வது கணிசமாகக் குறைந்து விட்டது என்று பரவலாகக் கருதப்படுகிறது. இதன் விளைவாகப் புதிய துறைகளில் தொழில் வளம் பெருக வில்லை; ஏற்கனவேயே உள்ள தொழில் களும் விஸ்தரிக்கப்படுவதில்லை. இதற் கான காரணங்கள் பற்றிச் சித்ரா எஸ். நாராயணஸ்வாமி எம். எல். சி.யிடம் வினவுகிறோம்.** □

**மக்களின் தேவைகள் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டே போகின்றன. ஆனால் அதற்கேற்ப உற்பத்தியும் பெருக வேண்டுமல்லவா?**

மக்களின் தேவைகள் பெருகுவதால் மட்டும் பொருட்களின் விற்பனை கூடுத லாகிவிடாது. தேவையான பொருட்களை வாங்கும் சக்தி மக்களிடையே பெருகினால் தான் விற்பனை பெருகும். விற்பனை பெருகி னால்தான் உற்பத்தி பெருகும். உற்பத்தி யைப் பெருக்கக் கூடுதலான மூலதனத்தை முதலீடு செய்யவேண்டும். முதலீடு செய் வதற்கான வசதி குறைந்து விட்டது. சூழ்நிலையும் சாதகமாக இல்லை...

**ஒரே விஷ வட்டமா யிருக்கிறதே! மக்களின் தேவைகள் பெருகவில்லை என்று கூறுகிறீர்கள்?**

தேவை வேறு; வாங்கும் சக்தி வேறு. ஸ்கூட்டர், குளிர் சாதனம் போன்ற பொருட்கள் ஒருவருக்குத் தேவைப்பட லாம். வாங்க வேண்டும் என்ற ஆசை மட்டும் இருந்தால் போதாது. பணம் வேண்டும். உணவு உடை போன்று அன்றாட வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருட்களை வாங்கியே தீரவேண்டும். அவற் றின் விலையும் கூடுதலாக உள்ள தால் அத்தியாவசியப் பொருட் களுக்குச் செலவிட்டது போக எஞ்சியுள்ள தொகை குறிப்பாக நடுத்தர வகுப்பினரிடையே மிக வும் குறைந்து விட்டது: மக்க ளின் தேவை அல்லது பொருட்களை வாங்க வேண்டும் என்ற ஆசையை நம்பிச் செயல் படுவதன்று 'மார்க் கெட்'. வாங்கும் சக்தி யைப் பொறுத்து இயங்குவது.



**வாங்குபவர்கள் (Buyers) என்று யாரைக் குறிப்பிடு கிறீர்கள்?**

நடுத்தர வகுப்பினர், பண வசதி மிகுதி யாக உள்ளவர்கள், அரசினர் ஆக மூவ கைப்படும். அரசினர் நிருவகிக்கும் பல் வேறு இலாகாக்கள், பொதுத் துறையி லுள்ள தொழில்கள் இவற்றுக்குத் தேவை யான பொருட்களை மிகுதியாக அரசு வாங்குவது குறிப்பிடத் தக்கது. அத்தியா வசியப் பண்டங்களின் விலையே உயர்ந் துள்ள நிலையில் உல்லாச அல்லது சுக வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களை மக்கள் வாங்குவது குறைந்து விட்டது என்று சொன்னேன். ▪

**பணக்காரர்கள் வாங்குவது ஏன் குறைய வேண்டும்?**

ஏன் குறையாது? ரூ. 16,000 விற்ற மோட்டாரின் விலை இன்று ரூ. 20,000. இரண்டு கார்கள் வைத்திருப்பவர்கள் ஒரே கார் போதும் என்று நினைக்கிறார்கள். டயர் விலை ஏறி விட்டது. பெட்ரோல் விலை ஏறி விட்டது. மோட்டார் காருக் கான வரி உயர்ந்து விட்டது. மேலும் அலுவலகத்துக்கு அருகிலேயே பல அதி காரிகளுக்கு வீட்டு வசதி செய்து கொடுப்ப தால் அவர்கள் கார் வாங்காமல் இருந்து விடுகிறார்கள். செய்தித் தாள்கள் 2, 3 வாங்கியவர்கள்கூட ஒன்று போதுமே என்று குறைத்துக் கொள்கின்றனர். வேலைக்காரர்களின் எண்ணிக்கையையும் குறைத்துக் கொள்ள வேண்டி யிருக்கிறது. பெரிய பங்களாக்களில் வசித்தவர்கள் பலர் சிறிய வீடு கட்டிக் குடியேறியுள் ளார்கள். ஒரு சூட் — நல்ல துணியில் — தைத்துக் கொள்ள வேண்டுமென்றால் குறைந்தபட்சம் ரூ. 150 செலவழிக்க வேண்டி யிருக்கிறதே? 'டைப்ரைட்டர்' கூட உல்லாச வாழ்க்கைக்கான பொருள் (Luxury article) என்று தீர்மானித்து 15 சதவிகிதம் வரி போட்டிருக்கிறார்களே?

**புதிய தொழில்களில் முதலீடு செய்யத் தொழிலதிபர்களிடம் மூல தனம் போதிய அளவு இல்லையா?**

இல்லை என்பது ஒரு காரணம். கடனோ உடனோ வாங்கி ஒரு புதிய தொழிலைத் தொடங்கினு லும், கடனுக்குச் செலுத்துகிற வட்டிக்கு ஏற்ப வருமானம் இருப்பதில்லை. வருமானம் வந் தாலும் அதற்குப் பல வரு டங்கள் பிடிக்கும். பல் வேறு யந்திர சாதனங் களை வாங்கி அல்லது வெளி நாடுகளிலிருந்து தருவித்து ஒரு தொழிற்சாலையை அமைப்பதற்கு ஆகும் செலவு (Capital cost) பன்மடங்காகப் பெருகி விட்டது. நுண்ணிய கருவிகள், அபூர்வமான யந்திர சாதனங்கள்



இவற்றை வாங்கி ஒரு தொழிலைத் தொடங்கும் செலவு முன்னைக்கு இப்போது 8 முதல் 12 மடங்கு வரை கூடுதலாகி விட்டது. இறக்குமதியாகும் சாமானுக்கான 'கஸ்டம்ஸ்' வரி அதிகமாகி விட்டது. அதையும் பொருட்படுத்தாமல் ஆரம்பித்து விட்டதாகவே வைத்துக் கொள்வோம். நிர்வாகச் செலவு பன்மடங்காகி விட்டதே இன்று? மின்சாரக் கட்டணம் கூடுதலாகி விட்டது. தொழிலாளர் சம்பளம், கச்சாப் பொருட்களின் விலை இவையும் பெருகி விட்டன. இந்த நிலையில் உற்பத்தி செய்த பொருள்களைக் குறைந்த விலைக்கு விற்க முடியுமா? ராஜ்ய மட்டத்தில் விற்பனை வரி, எக்ஸைஸ், — மைசூர் போன்ற மாநிலங்களில் 'ஆக்ட்ராய்' வரி வேறு — இவை யெல்லாம் சேர்ந்து உற்பத்தியான பொருளின் விற்பனை விலையை மிகவும் உயர்த்தி விடுகின்றன.

**தனி மனிதர்கள் வாங்குவது வேண்டுமானால் மேற்சொன்ன காரணங்களால் குறையலாம். அரசாங்கமே பெருமளவில் பல பொருட்களை வாங்குவதாகக் கூறினீர்களே? அவர்கள் எப்படியும் வாங்குவார்களல்லவா?**

அதை ஏன் கேட்கிறீர்கள்! அரசு இலாகாக்களும், அரசுடைமையான தொழில்களும் பல்வேறு பொருட்களைப் பெருமளவில் வாங்குவதென்னவோ உண்மைதான். உதாரணமாக, ரயில்வே, மின்வாரியம், விவசாயத் துறை, திட்ட அடிப்படையில் அமைந்த நிறுவனங்கள் — தொழில்கள் இவை ஏராளமான சாதனங்களை, கருவிகளை வாங்குகின்றன. ஆனால் இதில் அவ்வப்பொழுது ஏற்படும் ஏமாற்றமும் நஷ்டமும் இருக்கிறதே— அவை கூறத் தரமன்று!

**சற்று விளக்கமாகக் கூற முடியுமா?**

சுருங்கச் சொல்லியே விளக்கி விடலாமே? குறிப்பிட்ட பொருள்கள் இவ்வளவு தேவை என்று 'ஆர்டர்' கொடுத்து விடுவார்கள். அதை நம்பி நாம் உற்பத்தி செய்துவிட்டு, அவர்கள் பிறகு வாங்காமல் இருந்து விடும் போதுதான் ஏமாற்றமும் நஷ்டமும் ஏற்படுகிறது.

**ஆர்டர் கொடுத்தபின் வாங்காமல் இருந்துவிடக் காரணம்....?**

பட்ஜெட் போடுவதில் உள்ள குறைபாடுதான். திட்டம் போட்ட பிறகு ஒதுக்கீடு செய்த தொகையைக் குறைத்துவிடுவார்கள். அல்லது வேறு இனங்களில் செலவிடுவார்கள். 'ஆர்டர்' கொடுத்த பொருளை 'டெலிவரி' எடுப்பதில்லை. முதலீடு செய்த தனியார் துறைக்கு இதனால் நஷ்டமே. பொருள்கள் தேங்கிவிடும். குறைந்த விலைக்கு — அதாவது நஷ்டத்துக்கு விற்க நேரிடும்.

**இந்த நிலை அபிவிருத்தி அடைய என்ன வழி?**

பங்களாதேஷ் போர் நடந்ததல்லவா, அண்மையில்? அதன் பயனாக நிலைமை சாதகமாக மாறியுள்ளது என்பது குறிப்பிடத் தக்கது. நம் நாட்டின் பாதுகாப்புக்கு என்னென்ன தேவை என்பது இப்போது நன்கு தெரிய வருகிறது. இக் குறைகளை நிவர்த்திக்கப் புதிய தொழில்கள் தோன்றவும் பெருகவும் வேண்டும்; பெருகும் என்று நம்பலாம். போக்குவரத்துத் துறைகளை அபிவிருத்தி செய்யலாம். சாலைகளை அமைப்பதில் இன்னும் அதிக அளவு கவனம் செலுத்த வேண்டும். சாலை அமைக்கத் தேவையான யந்திரங்களை உற்பத்தி செய்ய வேண்டியதும் அவசியமாகிறதல்லவா? தற்காப்பு அடிப்படையிலான தொழில்கள் பெருக வேண்டும் என்பது உறுதி. மின்சாரத் தேவைக்கேற்ப நாட்டில் போதிய அளவு மின்சாரம் உற்பத்தி ஆகவில்லை. கிராமங்களிலெல்லாம் இன்று விளக்குகள் எரிகின்றன. நல்ல காரியம். வரவேற்கிறோம். ஆனால் கூடுதலான மின்சாரம் தேவைப்படுகிறதல்லவா? மேலும் விவசாய அபிவிருத்திக்கு உயர்ந்த வோல்டேஜ் மின்சக்தி தேவைப்படுகிறது. இத்துறையில் கவனம் செலுத்த வேண்டும்.

பேட்டி: 'பாணன்'

• + • + • + • + • + • + • + • + • + • + • + •

## தாடி உங்களுடையது; கை என்னுடையது!

நவாபுக்குச் சங்கீதம் என்றால் உயிர். எந்தப் பாடகன் அவனிடம் போனாலும் சரி, மணிக் கணக்காக உட்கார்ந்து அவன் பாட்டைக் கேட்பான். நவாபுக்குப் பெரிய தாடி இருந்தது. பாட்டு முடிந்ததும், இரண்டு கைகளையும் தாடியில் போட்டுக் கோதுவான். எவ்வளவு மயிர்கள் வருகிறதோ அவ்வளவும் எண்ணி, அத்தனை ரூபாய்களைப் பரிசாகக் கொடுத்து வந்தான். இரண்டு முதல் இருபது ரூபாய் வரை கிடைக்கும், அவரவருடைய அதிர்ஷ்டப் பிரகாரம். நிறைய நேரம் பாட்டுக் கேட்டுக் கஞ்சத்தனமாக இவ்வழியில் பணம் கொடுத்து வந்தான் இந்த நவாப்.

ஒரு நாள் பாடிய வித்வான் இப்படிச் சொன்னார்: "நவாப்! எங்களுக்கு எவ்வளவு அதிருஷ்டம் இருக்கிறதோ அவ்வளவுதான் சன்மானம் கிடைக்கும் என்று எங்களுக்குத் தெரியும். ஆனால் இந்தப் பரீட்சை நியாயமல்ல. காரணம் கையும் தங்களுடையது, தாடியும் உங்களுடையது. சில சமயம் கை வேகமாகவும் சில சமயம் சாவதானமாகவும் தாடிக்குள் சுற்றும். எனவே நான் ஒரு சிறு விண்ணப்பம் செய்கிறேன். நியாயம் கிடைக்கனும் என்றால், தாடி உங்களுடையதாக இருக்கட்டும்; கை மட்டும் என்னுடையதாக இருக்கட்டும். இப்பொழுது பார்க்கலாம் என்னுடைய அதிருஷ்டத்தை!" என்றார்.

நவாப் அவர் புத்திசாலித்தனத்தை மெச்சி உடனே ஐந்நூறு ரூபாய் கொடுத்து அனுப்பினான். மறுநாளிலிருந்து அவன் பாட்டுக் கேட்பதை நிறுத்தி விட்டான்!

ஸ்ரீ கணபத் ராவ் தேவாஸ்கர் சொன்னது.
'அம்ருத்' பத்திரிகையிலிருந்து
- பி. ஆர். ராஜாராம்.

• + • + • + • + • + • + • + • + • + • + • + •

பார்க் - டேவிஸ்

# மூவகை ஆற்றலுள்ள நிகோ சோப்

## மற்றெந்த சோப்பையும் விட உங்கள் சருமத்திற்கு மிகுந்த பாதுகாப்பளிக்கிறது

**1** நிகோ சருமக் கிருமிகளைக் கொல்லுகிறது

**2** நிகோ உடல் துர்நாற்றத்தைப் போக்குகிறது

**3** நிகோ உடலைத் துப்புரவாக்கிப் பாதுகாப்பளிக்கிறது

நீங்கள் ஆரோக்கியமான சருமத்தைப் பெற, நாள்தோறும் நிகோ சோப் தேய்த்துக் குளியுங்கள். நிகோவின் நச்சுநாச நுரைவளம் சரும நோய்க் கிருமிகளைக் கொன்று, உங்கள் சருமத்திற்கு ஆரோக்கியமளிக்கிறது. நிகோவிலுள்ள மருந்துப் பொருள்கள் வியர்வையினால் ஏற்படும் துர் நாற்றத்தைப் போக்குகின்றன. நிகோ சின்னஞ்சிறிய சருமத் தொற்றுகளையும் எதிர்த்துப் போராடி, சருமத்துக்கு மென்மையளிக்கிறது. அதோடு மினுமினுப்பும் புதுமையும் தருகிறது. இது மட்டுமல்ல; முகப் பருக்கள் மற்றும் வேர்க்குருவிலிருந்தும் உங்கள் சருமத்துக்குப் பாதுகாப்பு தருகிறது நிகோ. ஷாம்புவாகக்கூட இதைப் பயன்படுத்தலாம். இதனால் பொடுகு விழாமல் தடுக்கிறது நிகோ. எனவே, இன்று முதலே, நிகோ சோப் உபயோகிக்கத் தொடங்குங்கள்.

**நிகோ பழக்கத்தைக் கடைப்பிடிப்பீர், அது உங்கள் சருமத்திற்கு அவசியம்.**

*TRIPLE ACTION*

**NEKO®**

The Original Antiseptic Soap



PARKE-DAVIS

® Regd. Trade Mark. Regd. Users—Parke Davis (India) Ltd., Bombay-72 AS.

JAISONS 293

# இளைஞர் சமுதாயம்

## 10. தலைமைக்குத் தகுதி

ஒரு பையன் வாசல் திண்ணையில் உட்கார்ந்து ''இளமையிற் கல், இளமையிற் கல்'' என்று உருப்போட்டுக்கொண்டிருந்தான். அப்பொழுது அவ்வழியே சென்ற பாரதியார், சற்று நின்று பையன் உருப்போடுவதைக் கேட்டுவிட்டு, ''முதுமையில் மண், முதுமையில் மண்'' என்று சொல்லிக் கொண்டே சென்றார்.

இது வேடிக்கையான நிகழ்ச்சியாகத் தோன்றினாலும், இதில் பொதிந்து கிடக்கும் உண்மையை நாம் கவனிக்க வேண்டும். இளமைப் பிராயத்தைக் கல்லுக்குச் சமமாகக் கொண்டால், நல்ல கருத்துக்களையும், உயர்ந்த கொள்கைகளையும் அந்தக் கல்லில் செதுக்கி வைப்பதுதானே புத்திசாலித்தனம்! அவ்வாறுசெய்யத் தவறிவிட்டால், சோர்வும்,' அவநம்பிக்கையும், தோல்வி மனப்பான்மையும் முதுமையில் வந்து மண்டிக் கொள்ளும்.

இளைஞர்களைப் பொறுப்புள்ள பிரஜைகளாக்க என்ன செய்யவேண்டும் என்று ஒரு கேள்வியை நமக்கு நாமே எழுப்பிக்கொண்டு பதில் சொல்ல முடன்றால், நம்மில் பலருக்குப் பதில் சொல்லுவது சற்றுச் சிரமமாகத்தான் இருக்கும். இளைஞர்களின் பொறுப்பற்ற தன்மையைச் சுட்டிக்காட்டி அவர்களைக் குற்றவாளிகளாக்க முயலும் பெரியவர்கள், இளைஞர்களுக்குப் பொறுப்புணர்ச்சி உண்டாக நாம் என்ன செய்வது என்பதைச் சிந்தித்துச் செயல்பட வேண்டும்.

இது பற்றி யோசித்து மூளையைக் குழப்பிக் கொள்ள வேண்டிய அவசியம் வைக்காமல்சேலம் ஜூனியர்சேம்பர், இளைஞர் சமுதாயத்தைப் பொறுப்புள்ள பிரஜைகளாக்க நல்ல பல திட்டங்களை ஏற்படுத்தி யிருக்கிறது. அவற்றைப் பொதுவாக இளைஞர்களும், குறிப்பாகப் பெரியவர்களும் தெரிந்து கொண்டால் நிச்சயம் பயன் பெறலாம்.

இளைஞர்களிடம் பொறுப்புக்களை ஒப்படைத்து, அவர்களிடம் தலைமைத் தகுதியை அதாவது, **Leadership** உண்டாக்க வேண்டும் என்பது ஒரு கருத்து. பொறுப்புக்களை இளைஞர்களிடம் ஒப்படைக்கு முன் தலைமையை ஏற்கும் தகுதி அவர்களிடம் இருக்கிறதா என்று பார்க்க வேண்டும் என்பது இன்னொரு கருத்து. தலைமைப் பதவிக்குரிய பண்புகளை இளைஞர்கள் பெறும்படி செய்தல் வேண்டும். பிறகு தலைமையை ஏற்க அவர்களே முன்னுக்கு வருவார்கள். இது தான் சரியான வழி.

சேலம் ஜூனியர் சேம்பரின் தலைவர் புலவர் துக்காணி வரதராஜன் அவர்களிடம் சென்று சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்ததில் நான் அடைந்த மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது. அவர் நல்ல தமிழறிஞராதலால், நல்ல தமிழில் பேச ஆரம்



1. பட்ஜெட் பற்றிப் பல்வேறு கட்சிக்காரர்களின் விவாதம்



2. ஸ்ரீ ஆர். ரத்னம் உரை

பித்தார். ''நீங்களே கேள்வி கேளுங்கள். பதில் சொல்லும் முகத்தான் விளக்கம் தருகிறேன்'' என்றார்.

''தலைமைப் பதவிக்குரிய பண்புகள் என்று சொன்னீர்களே, அவை யாவை?''

''நல்ல கேள்வி. முதலில் தலைவனாவதற்குத் தன்னம்பிக்கை வேண்டும். கொள்கையில் உறுதி வேண்டும். இயற்கை அறிவோடு நூல் அறிவும் வேண்டும். விருப்பு, வெறுப்பற்ற மனநிலை வேண்டும். மனத்தளராமை வேண்டும். துணிந்த பின் பின்வாங்காமை வேண்டும். மற்றவர்கள் சிந்தனைகளையும் தூண்டிக் கலந்தாலோசித்து முடிவுக்கு வரவேண்டும். இதனை இதனால் இவன் முடிப்பான் என்று ஆராய்ந்து அதனை அவன் கண் விடவேண்டும். மற்றவர்களை அணைக்கும் பண்போடு அன்பும் வேண்டும். இன்முகமும், இன்சொல்லும், தெளிவும் வேண்டும்...'' என்று ஒரு விரிவுரையே ஆற்றி விட்டார் தலைவர்.

நான் இதைக் கேட்டு வியந்து போனேன். ''தலைவனாவதற்கு வேண்டிய பண்புகளைப் பற்றி நன்றாய்ச் சிந்தித்திருக்கிறீர்கள்'' என்று பாராட்டினேன்.

''...கொஞ்சம் பொறுமையோடு கேளுங்கள். நாட்டில் எத்தனையோ தலைவர்களைக் காண்கிறோம். அத்தனை தலைவர்களும் ஒரே மாதிரியான குணங்களோடு அமைந்து விடுவதில்லை. 'நான் தலைவன். நான் சொல்லுவதுதான் சரி. என் வார்த்தைக்கு அனைவரும் கட்டுப்பட வேண்டும்' என்று கூறும் சர்வாதிகாரப் போக்குள்ள தலைவர்கள் உள்ளனர். 'உங்களால்தான் இப்பதவிக்கு உயர்த்தப் பட்டுள்ளேன். எனக்குள்ள பொறுப்புக்கள் உங்களுக்கும் உண்டு. எனக்கு இப்பதவி முக்கியமல்ல; நீங்கள்தான் முக்கியம். மாற்றான் தோட்டத்து மல்லிகையும் மணக்கும்' என்று கூறுபவர்களும் உண்டு. 'எதுவும் நம்மாலும் மற்றவர்களாலும் நடப்பதில்லை. செடி வைத்தவன் தண்ணீர் ஊற்றுவான். எல்லாம் தானாக நடக்கும்' என்று ஒதுங்கும் தலைவர்களும் உண்டு. இவ்வாறு தலைமைப் பொறுப்பு ஏற்பவர்களை, சர்வாதிகாரிகள் என்றும், மக்கள் தலைவர் எனவும், தலையாட்டித் தலைவர் எனவும் வரிசைப்படுத்த முடியும். தலைவர்கள் என்றால் அரசியல் தலைவர்கள் தான் இன்று நம் நினைவுக்கு வருவார்கள். ஆனால் அது சரியன்று. அலுவலகம், தொழிற்சாலை ஆகியவற்றில் தலைமைப் பதவி வகிப்பவர்களும் தலைவர்கள்தான். பண்டைய தமிழ் இலக்கியத்தில் தலைவன், தலைவி என்ற பெயர்கள் வருகின்றனவே! அவையும் தனித் தலைமைப் பதவிகள்தாம்...'' என்று மேலும் விளக்கம் தந்தார் தலைவர்.

இவரிடம் நிறைய விஷயம் இருக்கிறது என்று தீர்மானித்துக் கொண்டேன். மேலும் அவர் தமது தலைமையில், நிகழும் நிகழ்ச்சிகளையெல்லாம் விளக்கினார். தெய்வ நம்பிக்கை மனித வாழ்க்கையைப் பயனுள்ளதாக்குகிறது என்றும், அனைத்துலக மனித இனம் முற்றும் சகோதர பாசத்தினால் இணைய முடியுமானால் அதுவே சேலம் ஜூனியர் சேம்பரின் பூரண வெற்றியாகும் என்றும், சமூகத்துக்குச் செய்யும் சேவைதான் மகத்தான சேவை என்றும் பல உதாரணங்களுடன் விளக்கினார்.

இந்தச் சங்கத்தின் மூலம் பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி, ஓவியப் போட்டி முதலிய இலக்கியப் போட்டிகள் இளைஞர்களுக்காக நடக்



3. தொடக்க விழாக் கூட்டம்



4. முத்தடுப்பு ஊசி தொடக்க விழாக் கூட்டம். மருத்துவர் அதிகாரி உரையாற்றுகிறார்.

கின்றன. இவற்றுக்கெல்லாம் பரிசுகள் அளிக்கப்படுகின்றன.

கண் பரிசோதனை முகாம் அமைத்து, ஏழை மக்களுக்கு இலவசமாகக் கண் வைத்தியம் செய்யப்படுகிறது.

**Know Your Candidate** என்ற தலைப்பில் ஒரு புது முறை இயக்கம் நடத்துகிறார்கள். அதாவது தேர்தல் வேட்பாளர்களை அறிமுகப் படுத்தி வைக்கிறார்கள். தலைசிறந்த பணி.

சேலம் ஜூனியர் சேம்பர் அரிசிப்பாளையத்தில் கம்பீரமான சொந்தக் கட்டிடத்தில் இயங்கி வருகிறது என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயம். இந்தியாவிலே ஜூனியர் சேம்பர் சங்கங்கள் பல இருந்தும் இது ஒன்றுதான் சொந்தக் கட்டிடத்தில் இயங்கி வருகிறது. இந்தத் தகவலைத் தலைவர் பெருமிதத்துடன் குறிப்பிட்டார்.

''ஒரு வாலிபனைத் தனித் தன்மையுடைய தலைவனாக வளர்ப்பது எப்படி?'' என்று கேட்டேன்.

''சாதாரணமாக நம்மில் பலர் ஏதாவது சில பொறுப்புக்களைச் சுமக்க நேர்ந்தால் 'அப்பப்பா! இதெல்லாம் நமக்கு வேண்டாம், ஏதோ ஆபீசுக்கு வந்தோமா, கையெழுத்துப் போட்டோமோ, ஒரு 'ஹலோ' சொல்லி விட்டுப் போனோமோ என்றிருக்க வேண்டும்' என்று கூறுவதைப் பார்க்கிறோம். இந்த மனப்பான்மை உள்ளவரையில் ஒருநாளும் தனித்தன்மை வளராது. இதற்கு மாறாக, பொறுப்புக்களை விரும்பி ஏற்று, பலவிதத்திலும் ஆராய்ந்து, அதனை வெற்றிகரமாக நடத்தித் தர முனைவதுதான் சிறப்பாகும். இதனையே உலக இளைஞர் இயக்கமாகிய ஜூனியர் சேம்பர் பல விதிகளை வகுத்துக் காட்டி, செயலிலும் நிலைநாட்டி வருகிறது. மற்றும் நம்மில் சிலருக்கு ஒரு காரியத்தை மேற்கொண்டால், முடிவில் வெற்றி கிட்டுமா கிட்டவில்லை என்றால் என்ன செய்வது என்ற அச்சம் எப்போதும் உண்டு. அந்த அச்சம் மிகவும் ஆபத்தானது. தோல்வி ஏற்பட்டு விடுமோ என்று அஞ்சிப் பொறுப்புக்களைத் தட்டிக் கழிப்பது கோழைத்தனம். 'நம்மாலும் முடியும், தலைமை ஏற்று நடத்தித் தான் பார்க்கலாமே' என்று முயற்சியைத் துணிந்து ஏற்பதுதான் விவேகமாகும்.

''கான முயல் எய்த அம்பினில் யானை
பிழைத்த வேல் ஏந்தல் இனிது''

என்ற வள்ளுவர் வாக்கை நோக்க வேண்டும். காட்டு முயலை வீழ்த்திய அம்பைக் கையில் வைத்துக் கொண்டிருப்பதை விட, யானையின் மேல் எய்து குறி தப்பிய வேலை வைத்துக்கொண்டிருப்பது மெச்சத்தக்கதாகும். அதாவது, எளிய செயலில் பெறும் வெற்றியை விட, பெரிய செயலை மேற்கொண்டு அதில் தோல்வி அடைந்தாலும் அதுதான் மகிழ்ச்சிக்குரியதாகும். என் விளக்கம் போதுமென்று நினைக்கிறேன்'' என்று தலைவர் கூறி நிறுத்தினார்.

சேலம் ஜூனியர் சேம்பர் தலைவர் ஒரு புலவராதலால் தம் கருத்தை அழகாக விளக்கி நல்லதொரு திருக்குறளையும் எடுத்துச் சொன்னார். நான் இளைஞர் சமுதாயத்தைப் பற்றி எழுத ஆரம்பித்ததிலிருந்து இதுவரையில் இவ்வளவு சிறந்த விளக்கவுரையைக் கேட்கவில்லை. என் மனம் நிரம்பி யிருக்கிறது.

புலவர் துக்காணி வரதராஜன் அவர்களின் ஆக்கபூர்வமான கருத்துக்களைக் கேட்டதும் எனக்கும் இளைஞர் சமுதாயத்தைக் கூவி அழைத்து என் கருத்தை அறிவிக்க வேண்டும் என்ற பேரவா ஏற்பட்டது. இதோ அழைக்கிறேன்: ''தம்பி, வீடும், ஏடும், நாடும் உன் தொண்டுகளை விரும்பி ஏற்கக் காத்துக்கொண்டிருக்கின்றன. பொறுப்பினை ஏற்க வா! போற்றிக் காக்க வா!''

—லோமாஸ்

# வட்டமேஜை

சிறு கோயில்களில் பணி புரியும் அர்ச்சகர்கள், மடைப்பள்ளியில் நைவேத்தியம் தயாரிப்பவர்கள், நாதசுர வித்வான்கள் முதலியவர்களுக்குக் கொடுக்கப்படும் ஊதியம், குறைந்தபட்சம் அவர்களது வாழ்க்கையைப் பிரகாசமாய்ச் செய்யாவிட்டாலும், அணைந்து விடாமல் காக்கும் அளவுக்குக்கூட இல்லை.

இறைபணி புரியும் இவர்களின் ஊதியங்கள் நாள் ஒன்றுக்கு ஒரு படி அரிசியும் (சிறிய படி) மாதம் இருபத்தைந்து ரூபாயும்; அல்லது வேளைக்கு இரண்டு பட்டை சாதமும் (நாள் ஒன்றுக்கு இரண்டு வேளைகள் மட்டுமே) மாதம் முப்பது ரூபாயும் என்ற அளவில் (எந்தக் காலத்திலேயோ நிர்ணயித்தது) வெட்கப் படத்தக்க நிலையிலேயே இன்றும் இருக்கிறது.

கோயில்களின் உபரி வருவாயைப் பொதுக் காரியங்களில் பயன்படுத்த முனையும் தமிழக அரசு, அதற்கு முன்பாக, இவ்வேழைகளின் வாட்டம் நீக்கி வைக்கட்டும்.

நெய்வேலி — 3
26—5—72

''வைதிகன்''

தமிழகத்தில் ஏராளமான ஏரி, குளம், குட்டைகள் ஆக்கிரமிக்கப்பட்டு நிலமாகவும் வீடாகவும் ஆகிக் கொண்டிருக்கின்றன. பல கிராமங்களில் ஆடுமாடுகள் நீர் அருந்தக்கூடக் குளம்குட்டைகள் இன்றித் தூர்க்கப்பட்டு ஆக்கிரமிப்பு செய்யப்பட்டு விட்டன. பசுமைப் புரட்சி, தீவிர சாகுபடித் திட்டம் இவைகளை அமுல்படுத்தும் அரசு பாசன வசதி தரும் நீர் நிலைகள் தூர்க்கப்படுதலைத் தடுத்திட வேண்டும். முதலில் ஆக்கிரமிப்பு செய்பவர்கள் வரப்பு கட்டி வேலியிட்டுச் சொந்தம் கொண்டாடி எதிர்ப்பு இருப்பின் அரசியல் கட்சியால் சலுகை அடைந்து, பட்டா பெற்றுவிடுகிறார்கள். ஏரி அல்லது குளத்தை நம்பிச் சாகுபடி செய்பவர்கள் எவ்வாறு பசுமைப் புரட்சி செய்து சாகுபடியை விருத்தி செய்ய இயலும்! எல்லோருக்கும் விவசாயம் செய்யக் கிணறு வெட்டி பம்ப் செட் போடப் பணம் சும்மாவா கிடைக்கிறது?

சண்டாச்சிபுரம்
20—5—72

வெ. பாலகிருஷ்ணன்

நிலவறை முதல்
கூரைவரை உங்கள்
கட்டிடத்தை
வாட்டர்ப்ரூ:ப்
தன்மையுடையதாக
வைத்திருக்க
உபயோகியுங்கள்--



# அக்கோப்ரூஃப்

கான்க்ரீட் மற்றும் சிமெண்ட் மார்ட்டரும் கூட தன் வேலையைத் திறம்பட செய்கிறது—முழு நிறைவு மற்றும் வலுவுப் பண்புகளை ஒரு சிறிதும் குறைக்காமல். **அக்கோப்ரூ:ப்** கட்டிடங்களைக் காக்கிறது. நிலவறைகளை நீர்புகாதவையாகவும், ஓதமற்றவையாகவும் வைத்திருக்கிறது.

**அக்கோப்ரூ:ப்,** குறிப்பாக கீழ்க்கண்டவை போன்ற நீர்த்தேக்க அமைப்புகளைக் கட்டுவதில் உபயோகிக்கச்சிபாரிசு செய்யப்படுகிறது—

- **நீர்த் தொட்டிகள்**
- **நீர்க் குழாய்கள்**
- **ரிசர்வாயர்கள்**
- **சாக்கடைகள்.**

உங்கள் தேவைகளுக்கு அருகாமையில் உள்ள தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கோ ஆ:ப் இந்தியா லிமிடெட்டின் கிளையையோ அவர்களுடைய விநியோகஸ்தர்களையோ அணுகுங்கள்:

**எஸிஸி**
**தரம்சிறந்த சிமெண்டிற்கு நீங்கள் பெறும் உத்தரவாதம்**

**தி அஸோஸியேடெட் சிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்**
**தி சிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆ:ப் இந்தியா லிட்.,**

SISTAS CMI-479 TM

# அம்மா

ரா. கணபதி

## 36. 'அவரது' அடிமை; அம்சம்; 'அவரே'யும்!

ஒவ்வொருவனும் தன்னுடைய மதத்தையே பின்பற்ற வேண்டும். கிறிஸ்துவர் கிறிஸ்து மார்க்கத்தையும், மகமதியர் மகமதிய மார்க்கத்தையும் அநுசரிக்க வேண்டும். ஹிந்துக்களுக்கோ ரிஷிகள் ஏற்படுத்திய புராதன மார்க்கம்தான் உத்தமமானது.

- பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

அம்மாவால் குழந்தைகளை எத்தனை காலம்தான் விட்டுப் பிரிந்திருக்க முடியும்? குழந்தைகளும் எத்தனை காலம் அம்மாவைக் காணாதிருக்க முடியும்? பக்தர் மனம் அம்மாவிடம் பள்ளத்து நீராகப் பாய, அம்மாவின் அருளும் அவர்களிடம் வெள்ளமாகப் பாய, 1904ஆம் ஆண்டில் மீண்டும் கல்கத்தாவுக்கு வந்தாள் அம்மா. பக்பஜார் சாலையில் அம்மாவுக்கு ஜாகை அமர்த்தப்பட்டது. யோகாநந்தருக்குப் பிறகு அம்மாவால் 'என் சுமை தாங்கி' என்று போற்றப்பட்ட சாரதாநந்தர் அவளுடனேயே துணையாகத் தங்கியிருந்தார். சாரதாநந்தர் உண்மையில் நம் சாரதைக்கு ஆனந்தராகவும், அவளுக்குத் தொண்டு புரிவதில் ஆனந்திப்பவராகவும் இருந்தார். அம்மாவின் பிரிய 'ஷரத்' அவரே.

அம்மாவின் புகழ் இப்போது வெளியுலகில் பரவிவிட்டது. நிறைய பக்தர்கள் வரலாயினர். அம்மாவும் தன் ஜன்மப் பணிகளில் ஒன்றான மந்திரோபதேசத்தைப் பலருக்கு அருளினாள். தவமிருந்து வேண்டினாலும் கிடைத்தற்கரிய மந்திரங்களை, சற்றும் எதிர்பாராது வந்தோருக்கும் தானே வலிய உபதேசிக்கலானாள் அம்மா. அது ஏதோ வெறும் வார்த்தைகளை இன்னொருத்தருக்குச் சொல்கிற விஷயமாக இல்லை. அம்மா தனது அம்மாத் தன்மையையே உருக்கி, அந்த அட்சரங்களில் திணித்து, அவற்றை மதுர மோதகங்களாக்கிப் பிள்ளைகளுக்கு ஊட்டினாள். அம்மாவிடமிருந்து மந்திரோபதேசம் பெற்ற பலரது அகவாழ்விலும் புறவாழ்விலும் அற்புத மாறுதல்கள் நிகழ்ந்தன. ஆதியில் இந்த மந்திரங்கள் எந்த ஞானவெளியில் தாமாக உதித்தனவோ, அந்த சிதாகாசத்தில் அம்மாவின் சித்த ஆகாசம் ஒன்றிவிடுமாதலால், மந்திரங்கள் அவற்றின் மூல சக்தி முழுவதுடனும் அவளினின்று வெளிப்பட்டன. ''உரியபடி ஜபித்தால் மந்திராக்ஷரங்கள் தாமே உள்ளிருந்து கொப்புளித்துக் கொண்டு வரும்'' என்று அம்மா சொன்னது ஸ்வாநுபூதி வாக்கியமாகும்.

இவள் அவர்களுக்கு மந்திரத்தைத் தந்த அதே சமயத்தில், அவர்களிடமிருந்து இவள் ஒன்றை வாங்கிக் கொண்டாள்—அவர்களது பாவத்தை வாங்கிக் கொண்டாள்; அநாயாசமாக வாங்கிக் கொண்டாள். அவளே சொல்லியிருக்கிறாள் — ஒருவருக்குத் தீக்ஷை அளித்து வீட்டுக்கு அனுப்புவதோடு தன் பொறுப்பு முடிந்துவிடவில்லை என்றும், அவரை உண்மையான, சாசுவதமான பேரின்ப வீட்டில் சேர்க்கிற வரைக்கும் அவரது வாழ்க்கைப் பொறுப்பு முழுவதும் தனதாகி விடுகிறது என்றும். அவரவருக்கு உரிய இஷ்ட தெய்வத்தையும் மந்திரத்தையும் தனது தெய்விகத்தால் பளிச்செனப் புரிந்து கொண்டு அதற்கேற்ப உபதேசம் தருவாள். அவர்களில் யாராவது அதன் பின் சரியாக ஜபம் செய்யவில்லை என்றாலும் அது அம்மாவுக்குத் தெரிந்துவிடும். அவர்கள் செய்யத் தவறியதற்கு ஈடாக, அம்மாவே தனது ஓயாத அலுவலுக்கிடையில் அவர்கள் பொருட்டு ஜபித்தவாறு இருப்பாள். இரவிலெல்லாம்கூட, கடும் காய்ச்சலின் போதும், எழுந்திருந்து அமர்ந்து ஜபம் புரிவாள். தனது சரீரம் விழுந்தபின்னும்கூட, தான் பொறுப்பேற்றுக் கொண்டவர்களை விடுவிக்கும் வரையில், தனக்கு ஓய்வு கிடையாது என்றும் தேவி திருவாய் மலர்ந்திருக்கிறாள். இப்படிப்பட்ட பெரும் பளுவை விரும்பி ஏற்ற ஓர் அவதாரம் எங்கு பார்க்க முடியும்?

மந்திர ஜபம், ராமகிருஷ்ண பூஜை இவற்றையே அடியார்களுக்கு முக்கியமாக வலியுறுத்தினாள் அம்மா. தத்துவ விசாரத்தில் அதிகம் இறங்கியதில்லை. ஆத்மாவை நிச்சயமாகக் காப்பாற்றும் உபாயம் தெரிந்தபின் அது எதற்கு? ''மந்திரம் காப்பாற்றும், நன்றாக ஜபயோகத்தில் ஈடுபடுங்கள்; டாகூர் காப்பாற்றுவார், அவரை ஆராதியுங்கள்'' என்பாள்.

அவள் டாகூருக்குச் செய்த வழிபாடு அழகு நிறைந்தது. அன்பு நிறைந்தது. காலையில் சிறிது கங்கா ஜலத்தை எடுத்துச் சென்று டாகூரின் படத்தின் மீது தெளிப்பாள். '' எழுந்திருங்கோ '' என்று சொல்லிக் கொண்டு, முன்னிரவு படுக்கப் போட்டிருந்த படத்தை, மறுபடி செங்குத்தாக எடுத்து வைப்பாள். பிறகு வீட்டு வேலைகளைக் கவனிப்பாள். ஒன்பது மணி அளவில் பதிக்குப் பூஜை தொடங்குவாள். பகட்டும், படாடோபமும், ஆடம்பரமும், அதியான ஆசார விதிகளும் இல்லாமல் எளிமையான பூரண பக்தி கமழ நடக்கும் அந்தப் பூஜை. படம் வைத்திருந்த ஆசனத்துக்குப் பக்கத்திலேயே ஸ்நானத்துக்கான கங்கை, சந்தனக் கல் — கட்டை, பஞ்ச பாத்திரம், தூபதீபக் கால்கள் இருக்கும். படத்தை அறை மத்தியில் வைத்து கங்கையை அதன் மீது புரோட்சித்து ஸ்நானம் செய்விப்பாள். சந்தனமிடுவாள். புஷ்பங்களால் அர்ச்சிப்பாள். அவருக்குப் பிடித்த சேமியா சொஜ்ஜி. ஜீராப் பாகு, பழங்கள் வைத்து நிவேதிப்பாள். அம்மாவின் வழிபாட்டைப் பிடிவாதமாகக் கேட்டுப் பெற்ற பிருந்தாவன கோபாலனும் டாகூரின் பக்கத்திலிருந்து இவற்றில் பங்குபெறுவான்.

மடியில் இருக் கரங்களைச் சாந்தமாக விரித்து, நிச்சலனமாகச் சிறிது போது தியானம் செய்வாள் அம்மா. அச்சமயங்களில் வெளி உணர்வு அவளை விட்டு நீங்கிவிடும். பிறகு பக்திமயமாகப் பதிக்கு நமஸ்கரிப்பாள். படத்தைப் பழைய இடத்திலேயே வைப்பாள். பதிக்கு அபிஷேகமான புனித நீரில் சிறிதைப் பருகி, அர்ச்சித்த துளஸி அல்லது வில்வ தளத்தைப் பிரசாதமாக உட்கொள்வாள். ஜயராம்பாடியில் புஷ்பம் அதிகம் கிடைக்காது. ஆனால் இது போன்ற விஷயங்களைக் குறித்து அம்மா அலட்டிக் கொள்ள மாட்டாள். துளசியோ, அட்சதையோ எது கிடைக்குமோ அதோடு திருப்தி அடைவாள். துளஸியிடம் அவளுக்கு அலாதிப் பற்றுதல். ''துளஸி மகா பவித்திரமானது.



அது இருக்கிற இடத்துக்கே ஒரு சாந்நித்தியம் உண்டு'' என்பாள்.

டாகூரின் முன் நைவேத்தியத்தை வைத்து, புது மனைப் பெண் போல் பட்டுக் குரலில் பாங்குடனே, ''ம், ம், சாப்பிடுங்கோன்னு!'' என்று அவள் கொஞ்சுவதைக் கேட்டவர்களுண்டு. ''கோபாலா, சாப்பாட்டுக்கு வரயாடா?'' என்று பிருந்தாவன பிம்பத்திடம் செல்லமாகக் கேட்பாள்.

பூஜை காலையில் பத்தரை மணிக்குள் முடிந்துவிடும். பூஜைப் பிரசாதம் காலைப் பலகாரமாக யாவருக்கும் தரப்படும். அதற்கு மேல் பக்தர்களைக் காக்க வைக்கக் கூடாது என்றே பூஜையை முடித்துவிடுவதாக அம்மா சொல்லியிருக்கிறாள். பகல் ஒரு மணிக்குச் சாப்பிடுவது அவர்கள் வழக்கம். பரிமாறுமுன், சமையலறையிலே, டாகூரின் திருநாமத்தைச் சொல்லி, அன்னம், குழம்பு, கறி முதலியவற்றை நீரால் சுற்றுவாள் அம்மா. அதே போல் மாலையில் அப்பம், சப்பாத்தி, பால் முதலியவற்றைப் பதிக்கு நிவேதித்தபின்பே, பிறருக்கு அளிப்பாள்.

''நீங்க வாஸ்தவமாகவே டாகூரைப் பார்க்கறேளா?'' என்று வினவியவர்களிடம் ''ஆமாம்'' என்று தெளிவாகச் சொன்னாள் தேவி. ''எனக்கு மட்டுமில்லே. யார் அந்தரங்கசுத்தமாகப் பூஜை பண்ணினாலும் அதை அவர் உயிரும் உடலுமா வந்து அங்கீகரிக்கிறார்'' என்று தேவி கூறினாள்.

தான் நிவேதனம் செய்கையில் படத்திலுள்ள டாகூரின் கண்களிலிருந்து ஓர் ஒளி புறப்பட்டு வந்து, நைவேத்தியத்தைத் தீண்டிச் செல்வதாகவும், அதுவே அவர் உண்டதாக அர்த்தம் என்றும் அம்மா சொல்வாள். அவளுக்குள்ளேயே வாழ்ந்த ராமகிருஷ்ணர், அவளை பக்தையாக்கிப் பார்த்து மகிழ்வதற்காக, பூஜா காலங்களில் அந்தப் படத்தில் எழுந்தருளி யிருந்தார்! பாலகோபாலன் கிண்கிணி சலசலக்க எழுந்திருந்து வந்து தன் நிவேதனத்தை ஏற்பதாகக் கூறுவாள்.

பிற்காலத்தில் அம்மாளின் அத்தியந்த சிஷ்யைகளில் ஒருத்தியான ஸரளா தேவி, ''அம்மா, என்ன மந்திரங்கள் சொல்லி, என்ன நியமங்களை அநுஷ்டிச்சால், டாகூர் நிவேதனத்தை ஏற்றுக் கொள்வார்?'' என்று வினவினாள்.

''என் கண்ணே, பெரிய பெரிய தெய்வம்னு உசத்தி வைத்துப் பூஜை பண்ணறச்சேதான் ஏகப்பட்ட மந்திரங்களும், நியமங்களும் வேண்டியிருக்கு. பகவான் நமக்கு ரொம்ப ரொம்பச் சொந்தம். அவன் நம்ம உடைமை இல்லையா? அவன் நமக்கே நமக்குன்னு, நம் சொத்துன்னு நினைக்கணும். நம்ம சொந்த மனுஷ்யாளுக்கு எதற்குப் பெரிய மந்திரங்களும் சடங்கும்? மனப்பூர்வமான அன்போடே, ''டாகூர் வாங்கோ, வந்து உட்காருங்கோ, இதைச்சாப்பிடுங்கோ'ன்னு சொல்லு. வந்து குதிப்பார். தன் வீட்டுக்கே வர சொந்தக்காரருக்குப் பிரியம் ஒண்ணே போதும். நீ எதைச் சமர்ப்பிச்சாலும் டாகூர் அங்கீகரிப்பார். அன்பு வேணும் என்கிறதாலே ஆசாரமே வேண்டாம், மந்திரங்கள் வேண்டாம்னு சொல்றதா நினைக்காதே. அடிப்படையாக அன்பை வைச்சுண்டு, இதுகளையும் அதன் மேலே எழுப்பிண்டா விசேஷம்தான்'' என்றாள். ஸரளாவுக்குச் சில மந்திரங்களையும், பூஜா கிரமங்களையும் போதித்தாள்.

இன்னொரு பக்தரிடம், ''எனக்குத்தான் பக்தி இருக்கேன்னு சொல்லிண்டு சாஸ்திர விதிகளை அலட்சியம் பண்ணக் கூடாது. பூஜா திரவியங்கள் கூடியவரை சுத்தமா இருக்கணும். சந்தனத்திலே திப்பி இருக்கக் கூடாது. புஷ்பம், பத்திரம் பூச்சி அரிக்காததா இருக்கணும். பூஜை பண்ணுகிறவர் தன் உடம்பையோ, சிகையையோ, வஸ்திரத்தையோ தொட்டுக்கக் கூடாது. நேரம் தப்பாமல் நைவேத்தியம் முதலானதுகளைப் பண்ணணும். தவிர்க்க முடியாமல் இடைஞ்சல் உண்டாகும்போது பகவான் க்ஷமிப்பார். அதே மாதிரி நம்மோட அறியாமையாலோ, இயலாமையாலோ நேருகிற தோஷங்களையும் கருணாமூர்த்தி மன்னிப்பார்.''

ராமகிருஷ்ணரை இறைவனாக வைத்துப் பூஜிப்பது, அவரது நாமத்தை பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷரம் போல் ஒரு மந்திரமாக ஜபிப்பது — ஆகிய இவ்விரண்டுக்கும் அம்மாவே மூல ஆசாரியர். சர்வ சாமானியமாக இருந்து கொண்டு எவ்வளவு பெரிய ஆத்மிகப் பணியைச் செய்திருக்கிறாள்! ராமகிருஷ்ணரின் மற்ற சீடர்கள் வேதாந்த தத்துவத்தை முழக்கம் செய்தனர். அம்மா பூஜையும் மந்திரமும் தந்தாள். தத்துவத்தால் மெய்ப் பொருளை உணர்ந்தவர் அதிகமிருப்பரா, பூஜையாலும் ஜபத்தாலும் சாந்தி அடைந்தவர் அதிகம் இருப்பரா என்பதைச் சொல்லத் தேவையில்லை. ஆனால் இந்தப் பூஜையும் ஜபமும் தற்கால சாந்திமட்டுமல்ல, அவை நிச்சயமாக மோக்ஷத்தையே அளிக்கும் என்று அம்மா பன்முறை அறுதியிட்டு உறுதி கூறியிருக்கிறாள். பூஜையாலும் ஜபத்தாலும் தங்களிடம் எவ்வித விசேஷ முன்னேற்றமும் காணமல் அலைப்புண்டு அம்மா

# இலவசம்!




## புத்தம் புதிய போர்ஹென்ஸ் புத்தகம்—'பற்களேயும் ஈறுகளேயும் பராமரிக்கும் முறை'.

இந்த விவரமான வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெறுங்கள்!
இன்றே இக் கூப்பனை அனுப்புங்கள்.

மானேர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய் 1.
''பற்களேயும் ஈறுகளேயும் பராமரிக்கும் முறை'' என்னும் போர்ஹென்ஸ புத்தகத்தின்* ஒரு பிரதியை இலவசமாக எனக்கு அனுப்பவும். தபால் செலவுக்காக 25 காசு தபால் தலை அனுப்பியுள்ளேன். K 6 BA

பெயர் ____________ வயது ______

முகவரி __________________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும்.
ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம் அல்லது கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

100F-152 TAM

> உலக ஆசைகள் மனத்தை மேக மூட்டமாகக் கவ்வுவது உண்மை. ஆனால் மேகத்தை அடித்து விரட்டும் காற்று ஒன்று உண்டு. பகவந் நாமமே அந்தக் காற்று.
>
> தூயஅன்னை சாரதாதேவி

விடம் முறையிட்டவர்களிடம், ''அதனால் என்ன? தொடர்ந்து செய்து வாருங்கள். நிச்சயம் பலன் இருக்கும். கடைசி மட்டும் பலன் இல்லாவிட்டாலும் இறுதி சுவாசத்தின் போதாவது சர்வ நிச்சயமாக டாகூர் வந்து அழைச் கண்டு போவார்'' என்பாள்.

அம்மா மந்திரம் அளித்தவுடன், ''இது நான் தரல்லை; டாகூராக்கும் தந்தார்'' என்பாள். ஆஞ்சநேய ஸ்வாமி, ''சில சமயங்களில் நான் ராமனுக்குப் பணி புரிகிற தாஸனாக அவனிடமிருந்து பிரிந்து நின்று துவைதத்தை ருசிக்கிறேன். சில சமயங்களில் ராமன் எனக்கு ஆதாரமாக உட்புகுந்து அவனது அங்கமாக என்னை இயக்குவதாகப் பாவித்து விசிஷ்டாத்வைதத்தை ரசிக்கிறேன்; சில சமயங்களில் ராமனன்றி வேறெதுவுமே இல்லாததால், ராமனே நான் என்று உணர்ந்து அத்வைதத்தில் ரமிக்கிறேன்' என்று கூறினார். இவ்விதமே சாரதைக்கும் டாகூருக்கும் மூன்று நிலைகளில் தொடர்பு இருந்தது; அவரது ஏதுமறியாச் சரண தாஸியாக இருந்தாள்; அவரது அம்சம் போலவும் இருந்தாள்; அவராகவேயும் இருந்தாள். அடியார்களின் பக்குவத்தைப் பொறுத்து இந்த மூன்று நிலைகளில் ஒன்றை வெளிப்படுத்துவாள். சில அபூர்வப் பிறவிகளிடமே தனக்கும் டாகூருக்கும் உள்ள சர்வசாம்யத்தை அம்மா வெளியிட்டாள். தாஸ் குப்தா என்பவர் டாகூரை விட அம்மாவைத் தியானிப்பதிலேயே தமக்கு மனம் பூரணமாக ஈடுபடுகிறது என்று அவளுக்கு எழுதியபோது, ''குரு மஹராஜ் யாரோ, அவரே தான் நான்'' என்று அம்மா வியக்தமாகப் பதில் எழுதச் செய்தாள். பிற்பாடு, தாஸ்குப்தா அம்மாவை நேரில் கண்டபோது ''குருநாதர் நாமத்தையும் நான் ஜபிக்க வேண்டுமா?'' எனக் கேட்டார்.

''ஜபிக்கத்தான் வேண்டும்.''

''ஏனம்மா! உங்கள் நாமத்தை ஜபித்தால் போதாதோ? நீங்களிருவரும் வேறு வேறில்லையே!''

''என்னதான் இருந்தாலும் குருமஹராஜ் நாமத்தை விட்டுவிடும்படி என்னால் கூற முடியாது.''

தன்னைப் பற்றி அவள் பலவிதமாகக் கூறிக் கொண்டாலும், ஸ்ரீ ராமகிருஷ்ணர் கடவுளேதான் என்பதைத் தவிர வேறெவ்விதத்திலும் அவரைப் பற்றிப் பேசியதில்லை. அவரைக் கடவுள் ஸ்தானத்திலிருந்து இறக்கி, ஞானி, மகான், குரு என்றெல்லாம் வைத்தால் அம்மாவுக்குப் பொறுக்காது.

ராமகிருஷ்ண பூஜை, மந்திரம், ராமகிருஷ்ண லோகம் என்பதையெல்லாம் அம்மா வலியுறுத்தியதைப் பார்த்து அவள் அத்வைதத்தைச் சொன்னதேயில்லை என்று எண்ணிவிட வேண்டாம். அத்வைதமே பரம சத்தியம் என்று கருதியவள். இதில் அவள் ராமகிருஷ்ணரின் சாக்ஷாத் பத்தினி. சம்பிரதாய அத்வைதக் கொள்கைப்படி பக்தி என்பது மனத்தை ஒருமுகப்படுத்தும் என்றும், இந்த ஒருமைப்பாட்டுக்குப் பிறகு சாதகன் ஆத்ம விசாரத்தால் அகண்ட பிரம்மத்தை உணருவான் என்றும் கூறப்படும். அதாவது பக்தி என்பது முக்திக்கு நேர் சாதனம் அல்ல. அது ஓர் உபாங்கம்தான். ஆனால் ராமகிருஷ்ணரோ பெயரும், உருவும், குணமும் படைத்த இறைவனிடம் பக்தி செய்வதாலேயே நாம ரூபமற்ற நிர்குண பிரம்மத்தை நேராக எய்தலாம் என்றார். ''நிர்குணம் தான் குணமாக வந்திருக்கிறது. அதனிடம், 'என்னை நிர்குணத்தில் சேர்ப்பிப்பாயாக' என்று வேண்டிக் கொண்டால் அது அந்த அநுக்கிரகத்தையும் நிச்சயம் அருளும்'' என்றார்.

சம்பிரதாய ஞான மார்க்கத்தில் சாதகன் தானாக 'எடுத்துக் கொள்வதாக'ச் சொல்லப்படும் அத்வைத நிலையை, பக்தி புரிந்து பரமாத்ம சக்தியிடமிருந்து அவன் 'பெற்றுக் கொள்ள'வும் முடியும் என்றார். நாம ரூபமற்ற பிரம்மத்தில் ஐக்கியமாவதையே அவர் மோட்சமாகக் கருதினார். அம்மாவும் இதே கருத்துடையவள் என்பதற்கு ஓர் உதாரணம்: இமாலயத்தில் மாயாவதியிலே அத்வைத ஆசிரமம் அமைத்திருந்தார் விவேகாநந்தர். அங்கே முழுக்க முழுக்க ஆத்ம விசாரம்தான். அந்த ஆசிரமத்தில் உருவ வழிபாடே கூடாது என்று விதித்திருந்தார் விவேகாநந்தர். இதை ஏற்கவொண்ணாத ஒரு குருபாயி அம்மாளிடம் முறையிட்டார். அம்மா பூஜா மார்க்கத்தையே உபதேசித்தவளாயிற்றே! ஆனால் அம்மா சொன்ன பதிலைப் பாருங்கள்: ''ஸ்ரீ ராமகிருஷ்ணர் பூரண அத்வைதி. அவர் அத்வைதத்தைத்தான் உபதேசித்தார். நீ ஏன் அத்வைதத்தைச் சம்பிரதாயப்படி கடைப்பிடிக்கக் கூடாது? அவ

ரோடே சிஷ்யாளெல்லாம் அத்வைதிகள் தானே!''

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சித்தாந்தத்தை அம்மா இவ்விதம் தெளிவாகக் கூறியது போலவே, அவர் வாழ்ந்து காட்டிய மையமான சத்தியத்தையும் அம்மா ஸ்பஷ்டமாக எடுத்தியம்பி யிருக்கிறாள். இந்த அம்சத்தில் ராமகிருஷ்ண பக்தர் பலருக்கு அம்மா சொல்வது புதுமையாகத் தோன்றக் கூடும். ஏனெனில், ராமகிருஷ்ணர் இதர மதங்கள் உள்பட, சகல சமய ஆசாரணைகளையும் அநுஷ்டித்ததால், அவரது வாழ்வின் மைய தத்துவம் சர்வ மத சமரசம் என்றுதானே நாம் திரும்பத் திரும்பக் கேட்டிருக்கிறோம்? ஆனால் அவரில் அவராக, இவளுள் அவர் மேவ, பாலும் சுவையும் போல் ராமகிருஷ்ணரின் அபின்ன சக்தியாக உள்ள அம்மா சொல்வதைக் கேளுங்கள்! கேசவாநந்த ஸ்வாமிகளிடம் பேசுகிறாள் அம்மா: ''குழந்தே! எல்லா மதங்களுக்குள்ளும் ஐக்கியம் இருக்குன்னு நிரூபிச்சுக் காட்டணும் என்று நோக்கம் வைச்சிண்டு டாகூர் சகல மதங்களையும் அநுஷ்டிச்சதா எனக்குத் தோணறதே இல்லை. அவர் எப்போதும் திவ்விய போதையிலே இருக்கத் திருவுளம் கொண்டவர். அதனாலே பகவானோட அநுக்கிரக லீலையைத் தினுசு தினுசாக ருசித்துப் பார்க்கணும்னே, கிறிஸ்துவ, முகமதிய, வைஷ்ணவ மார்க்கங்களையும் இன்னும் பல மார்க்கங்களையும் அப்பியாசம் பண்ணினார். உண்மையிலேயே உலகத்துக்கு அவர் தம் வாழ்க்கையினாலே தந்த விசேஷமான உபதேசம் பற்றின்மைதான். தனக்குன்னு எதுவுமே இல்லாமல், சுயநலம் துளிக்கூடக் கலக்காமல் எப்படிப்பட்ட துறவறத்தை வாழ்ந்து காட்டினார்? சமய சமரசம் என்கிறார்களே, அதுவும் உண்மைதான். பூர்வ அவதாரங்களிலே ஒரு குறிப்பிட்ட மதக்காராளுக்கே பிடிப்பு ஏற்பட்டது. டாகூர் எல்லாருக்கும் பிடிப்பாக இருக்கிறார். ஆனாலும் அவர் இன்னிக்கு உள்ள லோகத்துக்குப் பற்றின்மையைக் காட்டிப் பகவானை ஞாபகப்படுத்தவே முக்கியமாக அவதரிச்சார்.''

**ரா**மகிருஷ்ணர் அவரவரும் தம் மதத்தை அந்தந்த ஒழுங்குப்படி அநுசரிக்க வேண்டும் என்றார். அவர் ஒவ்வொரு சம்பிரதாயத்தையும் பின்பற்றிய போது அதன் விதிகளைப் பூரணமாகப் பின்பற்றினார். ஆனால் சர்வ மத சமரசம் என்கிற பெயரில் எல்லா மதங்களையும் கொட்டிக் கலந்து அவியல் செய்கிற காரியமும் அவர் பெயரிலேயே நடப்பதைப் பார்க்கும்போது அம்மா சொன்னதிலுள்ள அர்த்த புஷ்டி தெரிகிறது. பிற மதங்களைத் தாழ்வென்று எண்ணிப் பழிக்கக் கூடாது என்பதையே ராமகிருஷ்ணரின் வாழ்வில் படிப்பினையாகப் பெறுகிறோம். இதை எண்ணியே தேவி, அப்போது பிரமாதப் படுத்தப்பட்ட மத ஐக்கியத்தை இரண்டாம்பட்சமாகக் கூறினாள் போலும். நவயுகத்தின் தொழில் நுணுக்கம், விஞ்ஞானம் இவற்றால் செய்துகொள்கிற சௌகரியம் எல்லாம் மனிதன் தன்னைப் பேணிக் கொள்வதற்குத்தானே? பகவானை அடைவதற்கு யத்தனிக்காமல் உலகாயத இன்பங்களையே பெருக்கிக் கொள்கிறான் நவயுக மனிதன். இவனுக்குச் சுயநலனை மறந்து, பற்றற்று இருக்கப் போதிப்பதே தலையாய உபதேசம் அன்றோ? ராமகிருஷ்ணர் இதைச் செய்யவே வந்தார் என்று நம் அம்மா சொன்னபின் பேச்சு ஏது?

> பெண்களே! எவரிடமும் அதிக பாசம் வைக்காதீர்! வீட்டில் நடக்கும் விழாக்களில் கூட மிதமிஞ்சி ஈடுபடாதீர்கள். ''ஏ, மனமே! ஏகாந்தத்தைப் பயில்வாயாக'' என்று சொல்லிக் கொண்டிருங்கள். பிறர் விவகாரங்களை அறிய ஆவல் படாதீர்கள். பிரார்த்தனை, தியான காலங்களைச் சிறுகச் சிறுக அதிகரித்துக் கொண்டே யிருங்கள். பகவான் ஒருவனிடமே பாசம் வையுங்கள்.
>
> தூயஅன்னை சாரதாதேவி

**அ**ம்மாவுக்கு மேலும் கால்கட்டுகள் ஏற்பட்டன. அவளது முதல் தம்பியான பிரஸன்னரின் மனைவி ராமப்ரியா தேவிக்குக் காலரா கண்டு பன்னிரண்டே மணி நேரத்தில் அவள் கண்ணை மூடிவிட்டாள். அவளது பெண்கள் நளினியும், மாகு எனப்படும் சுசீலாவும் நம் அம்மாவின் அரவணைப்பைத் தேடி வந்துவிட்டனர். நளினிக்கு விவாகமாகிவிட்டாலும் இன்னமும் அவள் விவரமறியாத பெண் தான். அவளுக்கு விவரமாகத் தெரிந்த ஒரே ஒரு விஷயம் ஆசாரம்தான். அளவுக்கு மீறிய மடிக்காரி அவள். நம் அம்மா ராமகிருஷ்ண சங்கத்தினருக்குள் அதிகமாக வித்தியாசங்கள் பார்ப்பதில்லையல்லவா? இதனால் நளினி, அம்மாவுக்குத் தந்த தொல்லையும், அவளைப் பார்க்க வந்தவர்களுக்குத் தந்த மனக் கசப்பும் கொஞ்சநஞ்சமல்ல.

ஆசாரம் காரணமாகக் கணவரின் சங்கமும்கூட நளினிக்குப் பிடிக்காமற்

போயிற்று. பெரும்பாலும் அம்மாவுடனேயே இருந்தாள். ''அத்தையைக் கொண்டிருக்கா'' என்று அம்மாவும் இந்த ஓர் அம்சத்தில் பெருமையே கொண்டாள். ஆயினும் நளினியின் ஆசார வெறியில் அவள், இன்னார் இங்கே வந்தார், இன்னார் இதைப் பார்த்தார், இன்னார் இதைத் தொட்டார் என்றெல்லாம் ஓயாமல் குற்றம் சொல்லிக் கொண்டு ரகளை செய்தது வரம்பு மீறலாயிற்று. ஆசாரப் பித்து காரணமாக அவள் பட்டினி கிடந்த நாட்கள் பல; கடுங் குளிரில் திரும்பத் திரும்ப முழுகி அவஸ்தைப்பட்ட தினங்கள் பல. ஓர் இரவு தீட்டுப் பட்டு விட்டதாகச் சொல்லிக் கொண்டு உடல் விறைக்கும் குளிரில் அவள் வீட்டுக்குள் வராமல் வாசலிலேயே பட்டினியுடன் படுத்தபோது அம்மா அழகொழுக உபதேசித்தாள்: ''அம்மா நளினி! நான் கலப்பு மணம் செஞ்சுக்கணும்னு சொல்லவில்லே. பிறர் சமைத்ததை நாம் சாப்பிடணும்னு சொல்லல்லே. ஆனால் இதுக்கு அதிகமாக மடிகொண்டாடறது நியாயமில்லே குழந்தை. பரம்பரையாக ஒவ்வொருத்தர் ஒவ்வொரு கர்மா செய்யறா. அவா கலந்து போயிடாமல் அப்படியே பண்ணிண்டு இருக்கறது நல்லதுதான். கலக்கக் கூடாது என்கிறதாலே, ஒருத்தர் உசத்தி இன்னொருத்தர் தாழ்த்தின்னு நினைக்கறது பாபம் பெண்ணே! உன்னைவிட இன்னொருத்தர் தாழ்த்தின்னு நினைச்சு நீ அவா மனசைப் புண்படுத்தினா, உன்னைவிட எத்தனையோ உசத்தியான பகவான் உன்னை எப்படித் தன்கிட்டே நெருங்க விடுவான்? ஆசாரம், ஆசாரம்னு சொல்லிண்டு ஜீவகாருண்யமே இல்லாமல் நெஞ்சீரத்தைப் பஞ்சால் துடைச்சுட்டியே! உன்னையும் வதைச்சுண்டு, பிறரையும் வதைக்கிறதாலே பகவான் எங்கேயாவது பிரீதி அடைவானா? நான் இருக்கிற இடத்திலே எல்லாரும்தான் வருவா. டாகூர் குழந்தைகள் எல்லாரும் சேர்ந்துதான் சாப்பிடுவா. என்னாலே வித்தியாசம் பார்க்க முடியாது. உனக்கு வித்தியாசமாத் தோணினால் கங்கையைப் புரோட்சனை பண்ணிண்டு, 'கோவிந்தா'ன்னு சொல். அது சர்வத்துக்கும் பிராயச்சித்தம்.''

அம்மா இத்தனை சொல்லியும் அன்றொரு நாள் நளினி உள்ளே வந்து உண்டு படுத்தாலும், மீண்டும் தன் வழியிலேயேதான் சென்றாள். அன்பின் ஊற்றுக் கண்ணே இல்லாத இதயத்தில் அமுத உபதேசமும் எடுபடாது போலும்!

பிரஸன்னரின் மனைவியை இழந்த இரண்டு மாதங்களுக்குள் அருமைத் தாயை இழந்தாள் சாரதை. அன்று சியாமசுந்தரி வழக்கம்போலவே, கறிகாய்க்காரிக்கு நெல்லும் கடுகும் கொடுத்து, கீரைகள் வாங்கிக்கொண்டு உள்ளே வந்தாள். ''இன்னிக்கு என்னமோ கொஞ்சம் ஒய்ச்சலா இருக்கு'' என்று சொல்லிக் கொண்டே, தவிடு புடைக்கிற இடத்துக்கு வந்து, தானும் உதவி செய்தாள். பழங்கால மநுஷி என்பது அதுதான். வாசல் ஓரத்தில் போய்ப் படுத்துக் கொண்டாள். வழக்கம்போல் ஊர்க் குழந்தைகள் சியாமாப் பாட்டியிடம் வந்து விளையாடிக் கதை கேட்டன. ஆனால் இன்று சிறிது போதில் அவளுக்குப் பேசவும் அசக்தமாயிற்று.

வேலைக்காரரிடம், ''என்னவோ பண்றது, தலை கிறுகிறுன்னு....'' என்றாள். விஷயம் அறிந்த அம்மா விழுந்தடித்துக் கொண்டு வந்தாள்.

தன் அம்மாவை அணைந்து அமர்ந்தாள் நம் அம்மா. அவளுடைய காலம் முடிகிறது என்று நன்றாகத் தெரிந்தது. ''அம்மா, அம்மா! உனக்கு என்ன வேணும், சொல்லு'' என்றாள் மகள். பரம ஞானியான சாரதையைப் பெற்றவளும், கூடிய வரை தானும் ஞானத்துடனேயே நீண்ட நெடிய வாழ்க்கை நடத்தியவளுமான சியாமசுந்தரி, அந்த இறுதி நேரத்திலே, ''பூசணிக்காய் கறி சாப்பிடணும்போல இருக்கு'' என்றாள்! உலகத்தின் மயக்கை என்னென்பது?

''உடம்பு சொஸ்தமாகட்டும், பண்ணிப் போடறேன்'' என்று கூறிய சாரதை கங்கா தீர்த்தத்தைக் கொண்டு வந்து தாயின் வாயில் மும்முறை வார்த்தாள். சியாமையின் சரீரத்தில் சலனம் நின்றது. அம்மா அவளது சிரசிலும், இதய பாகத்திலும் தன் கையை அழுந்த வைத்து ஜபத்தில் ஆழ்ந்து விட்டாள். ஸ்ரீரமண பகவான் தம் அன்னையின் நிர்யாண சமயத்தில் அவளது இதயத்தை அழுந்தத் தேய்த்து விட்டுக் கொண்டிருந்ததும், அவளது எஞ்சிய கர்மத்தை எல்லாம் அந்த ஒரு சிறிது காலத்தில் அவள் அநுபவித்துத் தீர்க்குமாறு தாம் செய்ததாகப் பிற்பாடு கூறியதும் நினைவில் வருகிறது. (சிற்றப்பா நீலமாதவர் காலமான பின்பும் அவரது உடலத்தின்மீது இவ்விதமே அம்மா ஜபம் புரிந்தாளாம்.)

படுக்கை போடாமல், எவரையும் பணிவிடை செய்ய வைக்காமல், தெய்வப் பெண்ணின் அண்மையில், நல்ல நினைப்புடன், அநாயாச மரணம் அடைந்தாள் அன்பே உருவான சியாமசுந்தரி.

(தொடரும்)



# செயற்கை இழைத் துணிகளை பத்திரமாக சலவை செய்திட

# ஜெண்டீல்




செயற்கை இழைத் துணிகள்—
'டெரீன்', நைலான், ரேயான்
முதலிய மென்மையான துணிகளை
விசேஷ முறையில் சலவை செய்ய
வேண்டியது அவசியம். அந்த முறை
தான் ஜெண்டீல். அது உங்கள்
மென்மையான ஆடைகளின்—
புடவை, கால்சட்டை, சட்டை,
ஸ்கார்ஃப் முதலிய ஆடைகளின்
நெசவின் நயத்தையும்,
பளபளப்பையும் பாதுகாக்கிறது.

ஜெண்டீல், உங்கள் மென்மையான
துணிகளை—அதாவது செயற்கை
இழைத் துணிகள், பட்டாடை,
கம்பளி ஆடைகள் முதலியவற்றை—
பத்திரமாக சலவை செய்யவே
விசேஷமாகத் தயாரிக்கப்பட்டுள்ளது.

ஜெண்டீல் 500 கிராம் மற்றும்
250 கிராம் புட்டிகளில்
கிடைக்கிறது.

**ஜெண்டீல்—மென்மையான துணிகளை மனையிலேயே பத்திரமாக சலவை செய்யும் சாதனம்**

Shilpi HFMA-9A/72 Tam

# செல்லும் நாலணா

'மேனா'



**பா**ண்ட் பாக்கெட்டில் அறுபத்தி ஒரு ரூபாய்களை அடக்கிக் கொண்டிருந்த மணி பர்சை இழந்து விட்டிருந்த பதற்றம் அடங்காமல் நான் 'காஸினோ' தியேட்டர் வாசலில் லட்சுமணனோடும் கோபாலனோடும் நின்று கொண்டிருந்தேன். நாங்கள் மூவரும்தான் புரசைவாக்கம் குளக்கரை ஸ்டாப்பில் பஸ்ஸில் ஏறினோம். உட்கார இடம் கிடைக்காத வகையில் நின்றுகொண்டே ஏதோ பேசிக் கொண்டு வந்தோம். மூவரும் காஸினோ தியேட்டர் வாசலில் இறங்கினோம். இறங்கியவுடன் வழக்கமாக என் வலது கை பாண்ட் பாக்கெட்டைத் தடவிப் பார்க்கும், பர்ஸ் உணர்ச்சிக்காக! இன்று அந்த உணர்ச்சி இல்லை. பகீரென்றது!

பஸ்ஸில் ஏறுவதற்கு முன் மணிபர்சைத் திறந்து இருபது பைசா நாணயம் ஒன்றை எடுத்துக் கொடுத்துப் பயணச் சீட்டு வாங்கினதும், பர்சைப் பத்திரமாக எத்தனையோ வருடப் பழக்கத்தில் பாண்ட் பாக்கெட்டில் போட்டுக் கொண்டதும் நன்றாக நினைவில் நிற்கிறது!

எந்த விரல் வித்தைக்காரன் இன்று அதிர்ஷ்டம் செய்திருந்தானோ! அனாயாசமாக அடித்துக்கொண்டு போய்விட்டான்.

நண்பர்கள் மௌனமாகவே விடை பெற்றுச் சென்று விட்டார்கள். நான் இன்னும் பிரமையிலிருந்து விடுபடாமல், என்னை ஏற்றி வந்த பஸ், என்னை இறக்கிவிட்டு விட்டு மீண்டும் புறப்பட்டுப் போன திசையைப் பார்த்துக் கொண்டே நின்றேன்!

அந்த நேரத்தில் இழக்கப்பட்ட அறுபத்தி ஒரு ரூபாய் எனக்கு அப்படி யொன்றும் பிரமாதமான தொகையாகத் தெரியவில்லை. ஆனால் அபகரிக்கப்பட்ட மணிபர்சின் ஓரத்தில் 'விலை மதிக்க முடியாதது' என்று என்னால் மதிக்கப்பட்ட பொருளும் ஒன்று இருந்தது. மற்றவர்களுக்கு அதன் மதிப்பு பைசா பெறாததுதான். அது வேறொன்றுமில்லை. ஒரு செல்லாத பிரிட்டிஷ் அரசி தலை பொறிக்கப்பட்ட நாலணா வெள்ளி நாணயம். சுத்தமான நாணயம்கூட இல்லை. கறுத்து மழுங்கி, போலிக் களையுடன் கூடியதுதான்! என்னைப் பொறுத்தவரையில் அது விலை மதிக்க முடியாதது!

காரியாலயத்தை நோக்கி நான் நடந்தாலும் என் எண்ணமெல்லாம் அந்த நாணயத்தின் மேல் பதிந்து ஒடுங்கியது.

**ப**த்து வருடங்கள் — ஏன் அதற்கு ஒன்றிரண்டு வருடங்களுக்கு முன்பாகக் கூட இருக்கலாம். கும்பகோணத்தில் போய் இறங்கி, ஒரு ஹோட்டலில் ஜாகை வசதி செய்து கொண்டு சுவாமிமலைக்குப் புறப்பட்டேன்.

அவ்வப்போது மன நிம்மதி தேவையிருக்குமானால் சுவாமி தரிசனத்துக்காக நான் போய் வருவது வழக்கம். எங்கள் குலதெய்வம் வீற்றிருக்கும் கோயில்.

அன்று சாதாரண நாள்தான்! விசேஷம் ஒன்றும் இல்லை. சன்னதியில் கூட்டமும் அதிகம் இல்லை. நிதானமாகத் தரிசனத்தை முடித்துக்கொண்டு நடுப்பகல் வேளையில் வெளியே வந்தேன்.

முகப்பை ஒட்டிய அம்மன் சன்னதி வெளி மண்டபத்தில் ஐந்தாறு பிச்சைக்காரர்கள், யாத்திரீகர்களின் கருணையை எதிர்பார்த்து வரிசையாக உட்கார்ந்திருந்தார்கள்.

என் கவனம் இவர்கள் மேல் விழவில்லை. இவர்களுக்கப்பால் நீண்ட இடைவெளி விட்டு மண்டபத்து விளிம்புத் தூணில் சாய்ந்தவாறு கண்களை இழந்த பிச்சைக்காரக் கிழவி ஒருத்தி அமர்ந்திருந்தாள். அவளுக்கு முன்

னுல் விரிக்கப்பட்டிருந்த துணியில் இரண்டு மூன்று நாணயங்கள் கிடந்தன. மற்றவர்களைப்போல் அவள் குரல் எழுப்பவில்லை. அமைதியே உருவான சருகாக உட்கார்ந்திருந்தாள்.

அவளுக்கு நம்மாலான பைசா தர்மம் செய்ய வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. பையைத் துழாவி முதலில் அகப்பட்ட ஒரு பத்துக் காசு நாணயத்தை அந்த விரித்த



துணியில் போடக் குனிந்தேன். அப்போதுதான் மற்றொரு மூலையில் கிடந்த அந்தச் செல்லாத போலி நான்கணு நாணயம் என் பார்வையில் பட்டது.

'குருட்டுக் கிழவி என்ற தைரியத்தில் யாரோ செல்லாத காசைப் போட்டு ஏமாற்றியிருக்கிறார்களே' என்று என் மனம்குமுறியது. ''என்ன கிழவி! உனக்குக் கண் தெரியலேன்னு யாரோ புண்ணியவான் தைரியமாகச் செல்லாத நாலணாவைப் போட்டிருக்கான்?'' என்ற கேள்வி என் உதட்டு நுனி வரை இதயத்தின் அடியிலிருந்து வந்துவிட்டது. நல்லவேளையாக அந்தக் கேள்விக்கு ஒலி வடிவம் கொடுக்காமல் நிறுத்திக் கொண்டேன். அந்தக் கேள்வியால் அந்தக் கிழவியைக் குருடி என்று சுட்டிக் காட்டத்தான் முடியுமே தவிர வேறு பலனில்லை. அந்தக் காசைப் போட்டவனைக் கண்டிக்க நாம் யார் என்ற எண்ணமும் கூடவே தோன்றியது. இந்தப் பிரச்னைக்கு முடிவும் அதே கணத்தில் தெரிந்து விட்டது.

என் மணி பர்ஸைத் திறந்து ஒரு நல்ல நாலணு நாணயத்தை எடுத்து, அந்தக் கிழவியின் துணியில் போட்டுவிட்டு அந்தச் செல்லாத நாணயத்தைக் குனிந்து என் கையில் எடுத்தேன். அந்த விநாடியில்தான் எதிர்பாராத வகையில் என் முதுகுப் பக்கத்திலிருந்து அந்தக் குரல் எழுந்தது.

''பரவாயில்லையே! சில்லறை மாற்றிக் கொள்ளப் பிச்சைக்காரர்கள்கூட உதவுகிறார்களே!'' என்று எழுந்த அந்தக் குரலுக்கு உரியவர் ஒரு முதியவர். ஓரளவு வசதியான வாழ்க்கை நடத்துபவர் என்று அவர் தோற்றமே தெரிவித்தது. சற்று நேரத்துக்கு முன் அவரைக் கோயில் பிராகாரத்தில் பார்த்ததும் எனக்கு நினைவுக்கு வந்தது.

நான் ஏதோ பெரிய நாணயத்தைப் போட்டுக் கொஞ்சம் தர்மம் போக மீதி சில்லறையை எடுத்துக் கொள்கிறேன் என்று ஊகித்திருந்தால் பரவாயில்லை. ஒரு வேளை அந்தக் குருட்டுப் பிச்சைக்காரியின் சில்லறையையே நான் 'ஸ்வாகா' பண்ணுகிறேனே என்று நினைத்துக் கேள்வியை நாசூக்காகக் கேட்டிருந்தால் ?

எனக்கு அவமானமாக இருந்தது. ''ஒரு சிறு உபகாரம்'' என்று இரு பொருள்படக்

கூறிவிட்டு அவருக்கு முன்னாலே மண்டபத்தைக் கடந்து தேங்காய், பழக் கடை வாயிலில் நின்றேன். அவர் நான் எதிர்பார்த்தபடி என் அருகில் வந்தார்.

"நான் சில்லறை மாற்றவில்லை. அந்தத் துணியில் ஒரு செல்லாத நாணயம் இருந்தது. அதை எடுத்துக் கொண்டு அதே மதிப்புக்கு வேறு நாணயம் போட்டேன்" என்றேன்.

"ஓ, அப்படியா ?" என்று நிறுத்தினார்.

"நான் முதலில் காசைப் போடும்போது பார்த்திருப்பீர்களே !" என்று அவர் வாயைக் கிண்டினேன்.

"ஓ! சில மணி நேரத்துக்குமுன் கோயிலுக்குள் போகும் போது இதே செல்லாக் காசை நானும் பார்த்தேன். பேசாமல் போய் விட்டேன். உமக்குத் தோன்றிய இந்த உபகாரச் சிந்தனை என் மனத்தில் அப்போது தோன்றவில்லையே என்று நினைக்கும்போது எனக்கு வெட்கமாக இருக்கிறது. நீங்கள் முந்திக் கொண்டீர்கள்." அந்த முதியவரின் குரல் நெகிழ்ந்திருந்தது.

அடுத்த விநாடியிலேயே எங்கள் அறிமுகம் ஆழ்ந்த நட்பாக மாறிவிட்டது போன்ற உணர்ச்சி.

"உங்களைப் பார்த்தால் வெளியூர்க்காரர் மாதிரி இருக்கிறதே ! சுவாமி தரிசனத்துக்காகத்தான் வந்தீர்களோ?" என்றார்.

"ஆமாம்! நான் பட்டணத்தில்தான் இருக்கிறேன். அவ்வப்போது மனத்தில் தெம்பையும் சாந்தியையும் தோற்றுவித்துக் கொள்ள இந்தச் சந்நிதிக்கு வருவேன். என் தம்பி இந்த ஆண்டு பட்டப் பரீட்சை எழுதியிருக்கிறான், நல்ல முறையில் அவன் அதில் வெற்றி கண்டு ஒரு வேலையிலும் அமர்ந்தால் குடும்பத்தின் பொருளாதார நிலை உயரும். இந்த நினைவில்தான் இங்கே வந்தேன்."

"பையன் சட்டு புட்டுன்னு கல்யாணத்தைப் பண்ணிக் கொண்டு தனிக் குடித்தனம் போவான். அப்போ என்ன பண்ணுவீர் ?" என்றார் வேடிக்கையாக.

"தாராளமாய்ச் செய்து கொண்டு சௌக்கியமாக இருக்கட்டும். ஆனால் நான் குறிப்பிடுவது அந்தப் பொருளாதார நிலை இல்லை. எங்கள் தாயார் கொஞ்சம் பழங்காலம். கிராமத்திலிருந்து பட்டணத்துக்கு வர மறுக்கிறாள். அவளைக் கிராமத்திலேயே சௌகர்யமாக வாழச் செய்ய நான் ஆசைப்படுகிறேன். நான் விரும்பும் அளவுக்கு நடைமுறை சாத்தியமாக மாட்டேனென்கிறது. அவனுக்கும் ஒரு வேலை கிடைத்தால், இந்தப் பணியில் அவனும் துணை செய்வான் என்பதைத்தான் குறிப்பிட்டேன். அவள் எஞ்சிய காலத்தைச் சந்தோஷமாகக் கழிக்க வேண்டும் என்பது தான் எங்கள் குறிக்கோள்" என்று விளக்கம் கொடுத்தேன்.

"'தாயிற் சிறந்ததொரு கோயிலும் இல்லை என்று சொல்வார்கள். நீங்கள் அவளுக்காக இந்தக் கோயிலுக்கும் வருகிறீர்கள். மன்னிக்கணும் ! நான் வேடிக்கையாகப் பேசிவிட்டேன்! அது என் சுபாவம்! மறந்துடுங்க!... நான் கும்பகோணம் பக்கமாகத்தான் போகிறேன். கார் அந்தத் திருப்பத்தில் இருக்கிறது. நீங்களும் அந்தப் பக்கம் போகவேண்டியிருந்தால் என் கூடவே வரலாம். எனக்கும் கொஞ்ச தூரம் பேச்சுத் துணை கிடைத்த மாதிரி இருக்கும்" என்றார் அவர்.

"ரொம்ப நன்றி ! நானும் கும்பகோணம் தான் போக வேண்டும்" என்றேன்.

அம்மன் சந்நிதித் திருப்பத்தில் அந்தப் பெரிய கார் நின்று கொண்டிருந்தது. கார் ஓட்டி ஆசனத்தில் ஓர் இளைஞன் அமர்ந்திருந்தான். முதியவரையும் என்னையும் பார்த்தவுடன் அவன் மரியாதையுடன் எழுந்து வந்து கதவைத் திறந்தான். "கோபு! சாரும் கும்பகோணம் வரார். அவரை இறக்கிவிட்டுவிட்டு நாம் குடவாசல் போகலாம்" என்று சொல்லிவிட்டுக் காரில் ஏறி அமர்ந்தார்.

என்னையும் அவர் பக்கத்தில் ஏறி உட்காரும்படி சைகை செய்தார்.

கார் புறப்பட்டது. மழை வெய்யில், விவசாயம் முதலிய விஷயங்களைக் கடந்து பேச்சு மீண்டும் என் தம்பி பக்கம் வந்தது. படித்த பாடம், கல்லூரி, அவன் பழக்க வழக்கங்கள் எல்லாவற்றையும் கேட்டுத் தெரிந்து கொள்வதில் ஆர்வம் காண்பித்தார்.

கார் மேலக் காவேரியைத் தாண்டிவிட்டது. "நீங்க சக்திக்குத் தகுந்த அளவு உபகாரம் செய்வதைப் பற்றிக் கோயில் வாசலில் குறிப்பிட்டீர்களே ! பட்டணத்தில் எனக்குத் தெரிந்த பிரமுகர்கள் சிலர் இருக்கிறார்கள். ஏதோ என் சக்திக்கேற்ப உங்கள் தம்பிக்காக அவர்களிடம் சிபாரிசு செய்யலாம். அப்புறம் அவன் அதிருஷ்டம். எதற்கும் பரீட்சை முடிவுகள் வந்த பிறகு உங்கள் தம்பியுடன் நான் கொடுக்கும் விலாசத்துக்கு வாருங்கள் ! மறந்து விடாதீர்கள் !" என்று சொல்லிக் கொண்டே, கைப் பையிலிருந்து சாதாரண வெள்ளைக் காகிதத் துண்டை எடுத்து கே. பி. ராமச்சந்திரன் என்று பெயரையும் விலாசத்தையும் எழுதி என் கையில் கொடுத்தார்.

கும்பகோணம் ரயில்வே ஸ்டேஷன் அருகிலிருக்கும் ஹோட்டல் வாசலில் என்னை இறக்கி விட்டுவிட்டுக் கார், ரயில்வே லெவல் கிராசைத் தாண்டி நேராகப் போய்விட்டது. நானும் அன்று மாலை ரயிலிலேயே ஊருக்குத் திரும்பி விட்டேன்.

நான் கும்பகோணத்திலிருந்து திரும்பிப் பத்து நாட்கள் ஆகிவிட்டன. அந்த முதியவரைப் பற்றி நான் மறந்துகூடப் போய்விட்டேன். ஆனால் அவரைச் சந்திக்க உதவிய அந்தச் செல்லாத நாலணாக் காசும் அவர் கொடுத்த விலாசக் கடிதமும் என் மணிபர்சில் பத்திரமாகவே இருந்தன.

ஒரு நாள் காலையில் மகிழ்ச்சி பொங்க என் தம்பி கையில் பேப்பருடன் வேகமாக வந்தான். "அண்ணா ! பஸ்ட் கிளாஸ்" என்று அறிவித்தான். ஆனந்தத்தில் நான் திக்பிரமை பிடித்தாற்போல் உட்கார்ந்திருந்தேன். "அண்ணா ! இன்னும் இரண்டு நாட்களிலே கிரேட் சர்டிபிகேட்டுகள் வந்துவிடும். நீ யாரையோ சுவாமி மலையில் சந்தித்ததாகச் சொன்னாயே ! அவரைப் போய்ப் பார்த்து வரலாம்" என்றான்.

பத்து நாட்களாக ஒதுங்கிவிட்டிருந்த அந்த நினைவுகள் மீண்டும் அலைமோதின. 'அவருடைய சிபாரிசுகளுக்குப் பலன் இருக்குமா என்று முயற்சி செய்வதில் தவறு ஒன்றுமில்லையே! 'சரி' என்று தலையை ஆட்டினேன்.

# நேர்த்தியும் நம்பிக்கையும் கொண்டது

இதோ ஈடுஇணையற்ற இரண்டு ஓரியண்ட் டேபிள் மாடல்கள். இரண்டும் நேர்த்தியானவை, நம்பத்தகுந்தவை. ஒவ்வொரு இல்லத்திலும், வாழ்நாள் முழுதும் சௌகரியத்திற்காக நாங்கள் உங்களுக்கு வாய்ப்பு அளிக்கின்றோம். ஓரியண்டின் புதுமையான டெஸ்க் மின்விசிறி அல்லது பிரசித்தி பெற்ற டீலக்ஸ் டேபிள் மின் விசிறி.



## தேர்ந்தெடுங்கள்

டெஸ்க் விசிறி



டீலக்ஸ் டேபிள் விசிறி

இந்தியாவின் நீண்ட அனுபவமிக்க மின் விசிறி தயாரிப்பாளர்களால் தேர்ந்து அளிக்கப்படும் இந்த நேர்த்தியான வலிமை மிக்க மின்விசிறிகள் உங்களுக்கு பல வருடங்களுக்கு மென்மையான,' அடக்கமான உழைப்பைத் தருகின்றன.

ஓரியண்ட்-இன்றைய மின்விசிறிகளில் மிக நம்பிக்கை வாய்ந்த பெயர்.

இரண்டு வருடங்களுக்கு உத்தரவாதம்.



CC/O-1/2/72

## ஓரியண்ட் விசிறி

ஓரியண்ட் விசிறி

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட்.,
கல்கத்தா-54

தொழிற்சாலைகள்: கல்கத்தா, பரிதாபாத்

உலக முழுவதும் தேர்ந்தெ  டுக்கப்படு பவை



ஒரு கைதி: உனக்கு உறவினர்கள் நிறைய பேர் இருக்கிறார்கள் என்கிறாய்; ஆனாலும் ஒருவரும் உன்னைப் பார்க்க வருவதில்லையே!

மற்ற கைதி: எப்படி வரமுடியும்? எல்லோரும் இதே ஜெயிலில்தானே இருக்கின்றனர்! -கரிகாலன்

---

அரண்மனை மாதிரி பங்களா இருந்தது. என் சுவாமி மலை நண்பர் நகரத்திலேயே பிரசித்திபெற்ற வர்த்தக ஸ்தாபனம் ஒன்றின் அதிபர் என்பதும் புரிந்தது. இத்தனை பெரிய மனிதர் அன்று எத்தனை எளிமையாகவும் சகஜமாகவும் பழகினார் என்று நினைத்தபோது, எனக்கு அந்தச் செல்லாத நாலணாக் காசுதான் நினைவுக்கு வந்தது. அவசரம் அவசரமாக என் மணிபர்சைத் திறந்து பார்த்தேன். பத்திரமாக உள்ளே இருந்தது.

"நீங்க வருவீங்கன்னு தெரியும்! உங்க தம்பி உங்க நம்பிக்கையை வீண் போக்கவில்லை போலிருக்கு! பஸ்ட் கிளாஸ். டி பிளஸ். அப்படித்தானே! எல்லாம் எனக்குத் தெரியும்" என்றார் சிரித்துக்கொண்டே.

எனக்குப் பதில் சொல்ல வார்த்தை அகப்படவில்லை. நான் யார்? இவர் யார்? எப்படி இதையெல்லாம் தெரிந்து வைத்திருக்கிறார்? மாயாஜாலமா?....

"என்ன சும்மா இருக்கீங்க? இதெல்லாம் எப்படி எனக்குத் தெரியும்னு?.... நான் அன்று ராத்திரி மறுபடியும் கும்பகோணம் வந்தபோது நீங்க தங்கியிருந்த ஹோட்டல் ரிஜிஸ்டரிலிருந்து உங்கள் சென்னை விலாசத்தைத் தெரிந்து கொண்டேன். என் காரியதரிசிகளில் ஒருவரை, உங்கள் தம்பி ரிஸல்ட்டைக் கவனிக்கச் செய்தேன்! அவ்வளவுதான்! உங்க தம்பி பெயர் நடராஜன் தானே? என் சக்திக்கேற்ப நடராஜனுக்கு ஓர் உத்தியோகம் கொடுக்க முடியும்! அவ்வளவு போதுமல்லவா?.... ஆல்ரைட்! மிஸ்டர் நடராஜன், நீ இன்றைக்கே எங்கள் ஆபீசுக்கு வந்து சேரு! அப்பாய்ண்ட்மெண்ட் ஆர்டர் கொடுக்கச் சொல்லிடறேன்!... நீ போகலாம்" என்று அவனை அனுப்பிவிட்டு அவர் என் முகத்தைப் பார்த்தார்.

"சார்.... இனிமேல் எனக்குச் சுவாமி மலைக்குப் போக வேண்டும் என்று தோன்றும் போதெல்லாம் நான் இங்கேயே வந்து உங்களையே பார்த்துட்டுப்போறேன்! இரண்டுமே ஒரே இடமாகத்தான் எனக்குத் தோன்றுகிறது" என்றேன் நாத் தழுதழுக்க.

ராமச்சந்திரன் சிரித்தார். "நல்ல ஆளையா நீர்! நான் பிஸினெஸ்லே ஆயிரம் பேரோட போட்டி போடுவேன். ஆனால் இந்த மனச் சாந்தி விஷயத்திலே ஆண்டவனோடு போட்டி போடத் தயாரில்லை! நீர் அப்படியெல்லாம் செய்ய ஆரம்பிக்காதேயும்" என்று சொல்லிக் கொண்டே எழுந்தார்.

நானும் எழுந்திருந்தேன். என் அருகில் வந்தார். "அன்றைக்கு உம் தம்பிக்கு வேலை தேடும் அவசியம் பற்றிச் சொல்லி என்னவோ பொருளாதார நிலை அது இது என்று சொன்னீரே! நினைவிருக்கிறதா?.... எனக்குத் தாய் அன்பு என்னவென்றே தெரியாது. நான் பிறந்தேன். அவள் போய்ச் சேர்ந்து விட்டாள்!"

இப்போதும் அவர் முகத்தில் மந்தகாசம் தான். என் கண்களில்தான் நீர் பொங்கியது. எங்கள் தாயாரிடம் அவர் தாயாரைக் காண்கிறாரா? எங்கள் பாசத்திலும் பக்தியிலும் அவரும் பங்கு கொள்கிறாரா?

ஆஹா! எத்தனை பெரிய மனிதர்! எத்தனை எளிய மனிதர்!

வருடங்கள் ஓடின. ராமச்சந்திரன் ஸ்தாபனத்தில் என் தம்பிக்கு நல்ல முன்னேற்றம் ஏற்பட்டது. அவன் குடும்பம் பெருகியது. எங்கள் தாயாரின் வசதிகளும் நான் எதிர்பார்த்தவாறு பெருகின. ராமச்சந்திரன் ஓய்வெடுத்துக் கொண்டு விட்டாராம். அவர் பையன் பொறுப்பை ஏற்றுக் கொண்டு திறமையுடன் நிர்வாகம் செய்வதாக என் தம்பி அடிக்கடி சொல்லுவான்.

சென்ற ஆண்டு. ராமச்சந்திரனுக்கு உடம்பு சௌகரியமில்லை என்று கேள்விப்பட்டேன். போய்ப் பார்த்து வரக் கிளம்பினேன். அவருடைய உறவினர்களுக்கு நான் யார் என்று தெரியவில்லை. ஆனாலும் எப்படியோ நான் அவர் படுத்திருந்த அறைக்குப் போய் விட்டேன்.

ஆள் மிகவும் மாறி விட்டிருந்தார். பத்து வருடங்களில் இருபது வயது கூட ஆனவர் மாதிரி இருந்தார். கண் பார்வையும் வெகுவாக மங்கிவிட்டிருந்தது. ஞாபக சக்தியும் அவ்வளவாகச் சரியில்லை. நான் யார் என்று சொல்லியும் அவருக்குச் சரியாகப் புரியவில்லை. சட் என்று எனக்கு ஒரு யோசனை தோன்றியது. என் மணிபர்சிலிருந்த — பத்திரமாக இருந்த செல்லாத நாலணா நாணயத்தை எடுத்து அவர் உள்ளங் கையில் வைத்து அவர் விரல்களைக் கொண்டே தடவச் செய்தேன்.

சில விநாடிகள் பேசாமலிருந்த அவர் சட் என்று, "அடடே! நீங்களா? இது சுவாமி மலையிலே உங்களுக்குக் கிடைத்ததல்லவா? நம் அறிமுகம்கூட இதனால்தானே நிகழ்ந்தது! உங்க தம்பி நடராஜன் ரொம்பக் கெட்டிக்காரன்னு என் பையன் சொல்லுவான்! இந்தச் செல்லாக் காசைப் பத்திரமா வைத்துக் கொள்ளுங்கோ! தாயன்பை எனக்கு ஏற்படுத்தியதாக்கும்" என்றார்.

எனக்குப் புல்லரித்தது. அந்தக் காசின் மதிப்பு அளவிட முடியாமல் என் உள்ளத்தில் உயர்ந்தது. அப்புறம் தினசரி ஒரு தடவை அந்த நாணயத்தை எடுத்துப் பார்ப்பதும் என் வழக்கமாகி விட்டது.

என்னைப் பொறுத்தவரை அந்த நாலணாக் காசு, நல்ல, இனிய, நினைவுகளை நோக்கி என்னை இழுத்துச் செல்லும் நாலணா! மற்றவர்களுக்கு அது செல்லாத நாலணா!

# திருக் கல்யாணம்

ஸ்ரீவத்ஸன்

தூண்டா விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அர்த்த ஜாமப் பூஜை முடிவடைகிறது.

பிராகாரத்தில் சுற்றி வந்த நான்கைந்து பக்தர்கள் கோயிலைவிட்டு வெளியே வருகிறார்கள்.

ஸ்வாமியின் கர்ப்பக்கிரஹம். ஸன்னதியில் தேவஸேனாபதி குருக்கள் கண்களை மூடியவாறு ஆண்டவனிடம் மனம் உருகப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்.

தூண்டாவிளக்கு எரிந்து கொண்டிருந்தது.

''பகவானே! என் மனம் படும் பாட்டை நீ அறிய மாட்டாயா? நான் யாருக்கு என்ன கெடுதல் செய்தேன்? என் ஒரே மகள்—இருக்கும் நிலை — பேசும் பேச்சு சகிக்கவில்லை....நான் என்ன பாவம் செய்தேன்? ஏன் எனக்கு இவ்வளவு பெரிய தண்டனை? நான் அவ்வளவு பெரிய பாவியா?''

கண்களில் நீர் துளித்தது.

''பகவானே! பரம்பரை பரம்பரையாய் உனக்குத் தொண்டு செய்து வரும் சிவாச்சாரிய பரம்பரையில் வந்தவன்தானே நான். என் தாத்தா, அப்பா, நான் எவ்வளவு திருக்கல்யாணம் செய்து மகிழ்ந்திருக்கிறோம். எனக்குப் பிறகு இந்தக் குடும்பத்தில் உனக்குச் சேவை செய்யச் சந்ததி இல்லையே. இந்தச் சிவாச்சாரிய பரம்பரை துண்டித்துப் போவதில் உனக்கு என்ன அவ்வளவு ஆசை? என் ஒரே மகள் — அவள் நிலை, பழையபடி ஆரும்படி செய்வது உன் கடமையல்லவா — அவளுக்குக் கல்யாணம் செய்து வைக்க வேண்டாமா? உனக்கு மட்டும் திருக் கல்யாணம் ஆனால் போதுமா? அவளுக்குத் திருமணம் — அவள் மூலம் ஒரு பேரன் — உனக்குச் சேவை செய்யும் தொடர்பு துண்டிக்கப்படக் கூடாது.'' விம்மி விம்மி அழுதார் அவர்.

''என் ஒரே பெண். பார்க்கச் சகிக்கவில்லை — பெற்ற வயிறு படும் சங்கடம் சொல்லி முடியாது. நீதான் காப்பாற்ற வேணும். என்னை ஒழித்து விடுவதும் உயர்த்துவதும் உன் கையில்தான் இருக்கிறது.''

கருவறையை விட்டு வெளியே வந்தார். உள் பிராகாரத்தைக் கடந்தார்.

அம்மன் கோயில் மண்டபத்துக்கு முன் சந்தனம் அரைக்கும் இடத்துக்குச் சற்றுத் தள்ளி வந்து கொண்டிருந்தார். அந்த ராத்திரியில் —

யாரோ சந்தனம் அரைப்பது தெரிந்தது.

கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டு பார்த்தார் அவர்.

சுப்பண்ணாவா அரைக்கிறான்?

அவன் எப்படி வந்தான்? அவன் செத்துப் போய் மூன்று மாதமாகி விட்டனவே!

அவன் பக்கத்தில் நிற்பது?

அவர் பெண்—கௌரி.

அவள் எப்படி இந்த நேரத்தில் வந்தாள்?








மூன்று மாதங்களுக்கு முந்தி கோயிலுக்கு வந்தவன் அப்புறம் வரவேயில்லே.

அவர்கள் பேசுவது காதில் விழுகிறது.

" சுப்பண்ணு! உனக்குச் சமாசாரம் தெரியுமா ?"

"என்ன?"

" எங்கப்பாவுக்குக் கொஞ்ச காலமாய்ப் புத்தி பேதலித்திருக்கிறது. என்னைக் கல்யாணம் செய்து கொள்ளச் சொல்கிறார்."

" நீ என்ன சொன்னே ?"

"சுப்பண்ணுவைக் கணவனுய் வரித்த பிறகு எப்படி அது முடியும்னு கேட்டேன். அதற்கு அவர், அவன் தாலி கட்டினுனு என்று கேட்டார்."

அவர்கள் பேசிக் கொண்டிருந்த இடத்தை நோக்கி வேகமாய் நடந்தார்.

யாரையும் காணும். ஒரு பூனை மட்டும் சந்தனக் கல்லின் பக்கம் படுத்திருந்தது.

அவ்வளவும் பிரமை.

அவர்தான் என்ன செய்வார்? மூன்று மாதங்களாய் அவர் சிந்தனையில் நிரம்பி நிற்பவர்கள் சுப்பண்ணுவும் அவர் பெண் கௌரியும்.

**வீ**ட்டுக்குள் வந்தார். நேரிடத் தம் பெண் படுத்திருந்த கட்டிலின் அருகில் போனுர்.

"கௌரி."

" என்னப்பா ?"

"தூங்கலியா அம்மா ?"

"எப்படியப்பா தூங்கறது ?"

"கண்ணை மூடிக்கிறது. தூங்கறது."

"நான் தூங்கினுல் எல்லாரும் பரிகாசம் செய்யமாட்டாளா அப்பா ?"

"ஏன் பரிகாசம் செய்யறு ?"

"கணவனை முழுங்கிவிட்டு என்ன தூக்கம்னு சொல்லிக் காட்ட மாட்டாளா ?"

"சிவ சிவ. என்ன பேச்சு பேசுகிறுய், அம்மா. என் வயிறு கலங்குகிறது. இந்தா, ஸ்வாமி புஷ்பம் வைச்சுக்கோ."

"பூவா? எனக்கு எதற்கப்பா, பூ எல்லாம். அந்தப் பாக்கியம் எனக்கு ஏதப்பா ?"

" அப்படி எல்லாம் சொல்லாதே அம்மா. பூ வைச்சுக்கோம்மா."

"கணவனை முழுங்கிட்டுப் பூ வைச்சிக்கிரு பார்னு நாலு பேர் நாலு சொல்ல மாட்டாளா ?"

" உனக்கு இன்னும் கல்யாணம்தான் ஆகல்லியே அம்மா. பன்னிரண்டு வயதுப் பெண் பேசும் பேச்சா இது?"

"உனக்கு மூன்று மாதங்களாய்ப் புத்தி பேதலிச்சிருக்கப்பா. பட்டணத்திலே போய் வைத்தியம் செய்துக்கோ."

**வா**யில் துணியை அடைத்துக் கொண்டு திண்ணைக்குப் போய் உட்கார்ந்து கொண்டார். அவர் மனைவி வந்தாள்.

" சாப்பிட வராமல் ஏன் திண்ணைக்கு வந்து உட்கார்ந்திருக்கேள் ?"

" சாப்பாடா ? சாப்பிடாட்டா உசிர் இருக்காதா? இந்தக் கண்ணறாவியைப் பார்க்காமல் உசிர் போனுல் எவ்வளவோ நல்லது."

"நீங்க சரியாய்ச் சாப்பிட்டு மூணு மாசமாச்சே. உடம்பை இப்படிக் கவனிக்காமல் விட்டால் சுவாமி காரியம் யார் செய்வா?"

"நம்ம குடும்பம் தொடர்ந்து ஸ்வாமிக்குப் பூஜை செய்ய இருக்கணும்னுதான் கௌரிக்குக் கல்யாணம் செய்ய முயல்கிறேன். ஆனுல் அவன் போக்கு விபரீதமா யிருக்கு."

" ஸ்வாமி நம்மைக் காப்பாத்துவார். கைவிடமாட்டார். எழுந்திருங்கோ."

"அந்த ஒரு துளி நம்பிக்கையிலேதான் உயிர் ஒட்டிண்டு ஊசலாடிக் கொண்டிருக்கிறது. அது சரி, முன்னேக்கு இப்போ கௌரி எப்படி இருக்கா ? ஏதாவது தெளிவு தெரியறதா ?"

" எதையும் பொம்மனுட்டிகள் புருஷாள் காதிலே போடாமல் அவா மனசு நிம்மதியாய் இருக்கணும். சின்னதை எல்லாம் சொல்லி அவா நிம்மதியைக் குலைக்கக்கூடாது என்பார்கள். அதனுலே இந்த மூன்று மாதங்களாய் எல்லாவற்றையும் மனத்திலே போட்டு அமுக்கி, மனசிலேயே வைச்சு மறுகிண்டிருக்கேன்."

"விவரமாய்ச் சொல். எதையும் நாம இரண்டு பேரும் பரஸ்பரம் சொல்லி மனம் விட்டுப் பேசிண்டா மனசு இலேசாக இருக்காதா?"

" நாளைக்குத் திருக் கல்யாணம். நாளன்றைக்கே பட்டணம் போய் நல்ல டாக்டரிடம் காட்டி உடம்பைச் சௌக்கியமாக்கணும்."

"அதற்கெல்லாம் ஏற்பாடு செய்தாகிவிட்டது. திருக் கல்யாணம் ஆன மறு நாள் தர்ம கர்த்தாவும் பட்டணம் வரார். நாளன்றையி விருந்து பதினைந்து நாட்களுக்குக் கோயில் பூஜைக்கு என் மருமான் உமாபதியை ஏற்பாடு செய்துவிட்டேன். நாளைக்கு வரான். அவன் வந்துவிட்டால் ஸ்வாமி பூஜைக்கும் குந்தகம் வராது. கௌரியையும் பட்டணம் அழைத்துப் போகலாம்."

"சாப்பிட வாங்கோ."

"சரி."

ஒரு பிடி சாதம் வாயில் போட்டார். அடுத்த நிமிடம் கையை உதறி எழுந்தார்.

" ஏன் சாப்பிடவில்லே ?"

"சாதம் உள்ளே போனுல்தானே? உள்ளே கௌரியைப் பற்றிய விசாரம் நிரம்பி இருக்கும்போது சாதம் எப்படி உள்ளே போகும்?"

**தே**வஸேனுபதிக் குருக்களுக்குக் கௌரி பிறந்த வருடம் ஸ்வாமி கோயிலுக்குப் பரிசாரக வேலைக்கு ஆள் தேவையாய் இருந்தது. அப்போது வந்தவன் சுப்பண்ணு. பத்து வயதுப் பையன். பூணூல் போட்டிருந்தது.

ஒரு நாள் மடைப்பள்ளி வாசலில் பட்டைச் சாதத்துக்காக நின்றவனைக் குருக்கள் பார்த்துவிட்டார். அவனிடம் ஏதோ ஒரு பரிவு ஏற்பட்டது. விட்ட குறை தொட்ட குறை.

"எலே, அம்பி, நீ யாரடா? எந்த ஊர் ?"

"திருத்துறைப் பூண்டிக்குப் பக்கத்திலே ஓர் ஊர் மாமா. அப்பா அம்மா எல்லாரும் செத்துப் போயிட்டா. எங்கப்பா கோயில்லே பரிசாரக வேலை செய்துண்டிருந்தா. எனக்கு வேலை தரல்லே. எட்டு வயசிலேயே அப்பா பூணூல் போட்டுட்டா. சந்தியாவந்தனம் விடாமல் செய்வேன்."

" சந்தோஷம். கோயில்லே வேலை செய்யறியா ?"

''பேஷாய். கொடுத்து வைச்சிருக்கனுமே? சம்பளம்கூட வேண்டாம். பட்டைச் சோறு போதும்.''

இப்படித்தான் சுப்பண்ணு அவருக்கு அறிமுகமானுன். கோயிலில் வேலையில்லாதபோது வீட்டில் அவர் பெண் குழந்தை கௌரியை எடுத்து வைத்துக் கொள்வான்.

வருடங்கள் ஓடி மறைந்தன.

கௌரிக்கு ஐந்து வயது.

சுப்பண்ணுவுக்குப் பதினைந்து வயது.

தினமும் கௌரி கோயிலுக்கு வருவாள். சுப்பண்ணு சந்தனம் அரைக்கும் இடத்துக்குப் போய் அரட்டை அடிப்பாள். தேவஸேநாபதிக் குருக்கள் அவர்கள் பேசிக் கொள்வதை ரசிப்பார். அவரே சில சமயம் பேசுவார்.

''கௌரி, நம்ம சுப்பண்ணுவைக் கட்டிக்கிறியா ?''

''மாட்டேன். ஐயே, அவன் அடுப்புக்கரி மாதிரி இருக்கான். கோயில்லே திருவிழா டயத்துலே பூதவாகனம் வருமே அது மாதிரி இருக்கான். நான் மாட்டேன்.''

'' ஏண்டா, சுப்பண்ணு, நீ என்னடா சொல்றே ?''

''வாயாடி அவ. அவளைக் கல்யாணம் செய்துக்கப் பயமாய் இருக்கு.''

''நான் ஒண்ணும் உன்னைக் கல்யாணம் செய்துகொள்ளத் தயாராய் இல்லே.''

**ம**ற்றொரு சமயம்.

சுப்பண்ணுவிடம் கேட்டார். ''எங்கேடா, உன் மனைவி?''

''எங்கேயோ தெரியவில்லே. அவ வாயாடியானாலும் எங்கிட்டே பிரியமாயிருக்கா. நான் அவளைக் கல்யாணம் செய்து கொள்கிறேன்.''

கௌரியிடம் கேட்டார்: ''எங்கேடி, உன் கணவன்?''

'' பார்க்கவில்லையே, அப்பா. சுப்பண்ணு கறுப்பாய் இருந்தாலும் எங்கிட்டே பிரியமாயிருக்கான். அவனையே செய்துக்கறேன்.''

''ஸபாஷ். மாப்பிள்ளை தேட வேண்டிய வேலை மிச்சம்.''

**ம**ற்றொரு சமயம்.

'' ஏனப்பா ?''

'' என்ன கௌரி ''

''இருகல்யாணம் எதுக்கப்பா செய்யறு?''

'' பகவானே கல்யாணம் செய்துக்கும் போது மனுஷாளும் செய்துக்கணும்னு உணர்த்தத்தான்.''

'' கல்யாணம் செய்துண்டால்தான் உண்டா ?''

'' ஒரு பெண் ஒரு ஆணைக் கணவனுக மனத்தில் வரிச்சுட்டாலே கல்யாணம் ஆனதாக அர்த்தம். அப்புறம் கல்யாணம் கார்த்தி என்பது சம்பிரதாயமான சடங்குகள்தான்.''

இப்படிச் சிறு வயதில் ஐந்து வயது முதல் பத்து வயது வரையில் தெரிந்தோ தெரியாமலோ, அறிந்தோ அறியாமலோ அவர் சொல்லியவை கௌரியின் மனத்தில் பதிந்தன.

கௌரி சுப்பண்ணுவைக் கணவனுக வரித்து விட்டாள் என்பதை அவர் அறியவில்லை.

சுப்பண்ணுவைப் பார்த்து 'உன் மனைவி எங்கேடா' என்றும், கௌரியிடம் 'உன் கணவன் எங்கே' என்றும் கேள்வி என்ற உரம் போட்டு அவரையும் அறியாமல் அவர் களை இறுகப் பிணைத்துவிட்டார்.

**மூ**ன்று மாதங்களுக்கு முன்பு.

கௌரிக்கு வயது பன்னிரண்டு.

பெண் ருதுவாவதற்கு முன் மணம் முடித்து விட அவர் ஆரம்பித்த போதுதான் தம் மகள் மனத்தில் தென்றலைத் தாம் வளர்க்கப் போய் அது புயலாக உருக் கொண்டிருப்பதை அறிந்து திடுக்கிட்டார். கௌரி ஜாதகத்தை எடுத்துத் தம் மைத்துனனுக்கு அனுப்பி அவர் பையன் ஜாதகத்தை அனுப்பும்படி கேட்டார்.

''யாருக்கப்பா, கல்யாணம்?''

''உனக்குத்தான் அம்மா, கௌரி.''

''எனக்குத்தான் சின்ன வயசிலேயே சுப்பண்ணுதான் கணவன்னு சொல்லிட்டியே!''

''அதெல்லாம் விளையாட்டு அம்மா. ஒரு வீட்டிலே ஆண் குழந்தையும் இன்னொரு வீட்டில் பெண் குழந்தையும் பிறந்தா அவாளை ஜோடி சேர்த்துப் பேசுவார்கள். அதே மாதிரி அத்தை பிள்ளை, மாமா பெண் இவர்களை ஜோடி சேர்த்துப் பேசுவா. இதெல்லாம் விகல்பம் இல்லாமல் பேசற பேச்சம்மா. அதுக்குப்போய் அர்த்தம் செய்துக்கறது சரியில்லே.''

''அப்பமன்னு சுப்பண்ணு என் கணவன் இல்லையா ?''

'' அதெப்படியம்மா, முடியும் ? நாம சிவாச்சாரிய பரம்பரை. அவன் பரிசாரகப் பரம்பரை. உங்க ரெண்டு பேருக்கும் எப்படியம்மா கல்யாணம் செய்ய முடியும்?''

அவள் எழுந்து போய்விட்டாள்.

**ம**று நாள். கோயிலில் எல்லா வேலைகளையும் முடித்துக் கொண்டு புறப்பட்டார் அவர். இரவு மணி பத்து.

---

### கிணறு வெட்டப் பூதம்!



1942ம் ஆண்டு, காங்கிரஸ் செயற்குழு, 'க்விட் இந்தியா'த் தீர்மானத்தை நிறைவேற்றியதும் இந்திய அரசு காங்கிரஸ் தலைவர்கள் அனைவரையும் கைது செய்து கொண்டு போய் அகமது நகர்க் கோட்டையில் சிறை வைத்ததுதான் தெரியுமே.

அங்கு சிறை யிருந்தவர்களுள் டாக்டர் பட்டாபி சீதாராமையாவும் ஒருவர். அவர் தம்முடையவும் பிற தலைவர்களுடையவும் சிறைவாசத்தைப் பற்றி ஒரு நூல் (Feathers and Stones) எழுதியுள்ளார். அதில் ஒரு வேடிக்கை சம்பவத்தைக் கூறியுள்ளார்.

சிறையில் எலித் தொல்லை மிகுதியாக இருந்ததாம். டாக்டர் பட்டாபியும் மற்றத் தலைவர்களும் பெரிதும் முயன்று ஓர் எலிப்பொறியை வாங்கிக் கொண்டுவந்து வைத்தார்களாம். முதல் இரண்டு மூன்று நாள், பொறியில் ஓர் எலிகூட விழவில்லை. நான்காவது நாள் காலையில் வந்து பார்த்தபோது, பொறியின் வாய் மூடி யிருந்தது. உள்ளே 'கட புடா' வென்ற சத்தம் வந்து கொண்டிருந்தது. ''சரி, ஒரு பெரிய எலி அகப்பட்டுக் கொண்டது!'' என்று எல்லோரும் மகிழ்ச்சியடைந்தனர். ஆனால், என்ன அதிசயம், பொறியை மேலே தூக்கிப் பார்த்தபோது, அது எலி இல்லை, பூனை! அனைவருக்கும் ஏமாற்றம்.

- சபரி

சுப்பண்ணாவைக் கூப்பிட்டுக் கொண்டு திருக்குளத்துப் படியில் அமர்ந்தார்.

''டேய் சுப்பண்ணா, நீதாண்டா இந்தச் சிவாசாரிய பம்பரையைக் காப்பாத்தணும். அது உன் கையிலேதான் இருக்கு.''

''என்னண்ணா இது. பெரிய பேச்சு எல்லாம் பேசறேள். நான் பத்து வயசிலே உங்க காலடியிலே வந்து விழுந்தவன். இப்ப வருடங்கள் பத்து ஆயிடுத்து. நீங்க கட்டளை இடுங்கோ, செய்யறேன்.''

''அப்படியில்லேயப்பா. சாட்சிக்காரன் காலிலே விழறதை விடச் சண்டைக்காரன் காலிலே விழணும்னு சொல்லுவா. என் பெண்ணை விட்டுக் கொடடா.''

''என்ன அண்ணா இது?''

''அவள் உன்னைத்தான் கல்யாணம் பண்ணிப்பாளாம். உனக்கும் அவளுக்கும் பிறக்கும் குழந்தைக்கு சுவாமி பூஜை செய்யும் அருகதை இல்லாமல் போயிடும். என் சிவாசாரிய பரம்பரைத் தொடர்பு விடாமல் ஸ்வாமி பூஜை செய்வது உன் கையில்தான்.''

சுப்பண்ணா தன் சங்கடத்தைத் தீர்த்து விடுவான் என மனப்பூர்வமாக நம்பினார் அவர். அவர் நம்பிக்கையைச் சுப்பண்ணா மறுநாளே பூர்த்தி செய்து விட்டான்.

பொழுது விடிந்தது. திருக்குளத்தில் தண்ணீர் எடுக்க வந்த குருக்கள் மனைவி, குளத்தில் சுப்பண்ணா மிதப்பதைப் பார்த்து அலறினாள்.

அதைத் தொடர்ந்து ஊரே அலறியது. இவ்வளவு வருடங்களாய்த் திருக்குளத்தில் தண்ணீர் எடுத்த சுப்பண்ணா கால் தவறி விழுந்து இறந்து விட்டானே என்று ஊரே அங்கலாய்த்தது.

தேவஸேனாபதி குருக்கள் மட்டும், ''டேய் சுப்பண்ணா! இப்படிச் செய்தால்தான் என்னை இந்தச் சங்கடத்திலிருந்து விடுவிக்க முடியும் என்று எண்ணி உன்னைத் தியாகம் செய்து கொண்டாயா?'' என்று வாய்க்குள் சொல்லி அழுதார்.

அன்று சுப்பண்ணாவின் பிரேதத்தைத் திருக்குளத்தின் மேல் படியில் போட்டிருந்ததைப் பார்த்துவிட்டு வீட்டுக்குள் ஓடி வந்த கௌரி நாள் முழுதும் அழுது தீர்த்தாள்.

மறுநாள் முதல் அவள் செய்கைகளில் ஒருவித மாறுதல். குங்குமம் இட்டுக் கொள்ளவில்லை. பூ வைத்துக்கொள்ளவில்லை.

தாயும் தகப்பனும் இடி விழுந்தாற்போல் ஆனார்கள். பன்னிரண்டு வயதுப் பெண் இப்படியா நடந்துகொள்ளும்?

''சுப்பண்ணா உன்னைத் தொட்டுத் தாலி கட்டாதபோது அவன் எப்படி உன் கணவனாக முடியும் கௌரி!''

''மனத்தால் வரித்தாலே கணவன். கல்யாணம் கார்த்தி யெல்லாம் சம்பிரதாயச் சடங்குகள் என்று சொல்வேளே அப்பா!''

அதன்பின் தினமும் இதே காட்சிதான். அவள் மாறவில்லை.

அன்று திருக்கல்யாண நாள். காலை.

எழுந்து நீராடினார் குருக்கள். கோயிலுக்குப் புறப்படும்போது பெண் கட்டிலின் அருகில் நின்றார். ''கௌரி!''

''என்னப்பா?''

''கார்த்தாலே கோயில்லே திருக் கல்யாணம். நான் இப்போது போறேன். ஸ்நானம் செய்துவிட்டுப் புதுப் புடவை கட்டிண்டு, தலை நிறையப் புஷ்பம் வைச்சிண்டு வாம்மா. திருக்கல்யாணம் அவசியம் நீ பார்க்கணும். வரியா அம்மா?''

''வரேன் அப்பா''

குருக்களுக்குச் சந்தோஷம் பிடிபடவில்லை. மனைவியிடம், ''கௌரி கோயிலுக்கு வரேன்னு சொல்லிட்டா. அவசியம் அழைத்து வா'' என்று சொல்லிச் சென்றார்.

கோவிலில் பிரமாதமாய்த் திருக்கல்யாண ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன.

சொன்னபடி கௌரி வந்து விட்டாள்.

''வந்துட்டேனப்பா.''

ஸ்வாமிக்கு அலங்காரம் செய்துகொண்டிருந்த குருக்கள் நிமிர்ந்து பார்த்தார்.

அம்பாளே அவர் செய்த அலங்காரத்தில் நிற்பது போல் இருந்தது. பட்டுப் பாவாடை, தாவணி, தலை நிறையப் பூ. குங்குமம் நெற்றியில். அவர்புளகாங்கிதம் அடைந்தார்.

''என் பெண் சுயநிலை அடைந்துவிட்டாள். நானே பாக்கியசாலி'' என்று சொல்லி மகிழ்ந்தார்.

பார்க்கும் பேரிடம் எல்லாம் ''எங்க கௌரிக்கு சொஸ்தமாயிட்டது. தெரியுமோல்லியோ!'' என்று குதூகலத்துடன் இரைந்து கத்திக் கொண்டே இருந்தார்.

''கௌரி! இப்படி வாம்மா.''

''வந்தேன் அப்பா.''

''ஸ்வாமி அலங்காரம் எப்படியம்மா.''

''பிரமாதம் அப்பா.''

''என் பேரன்கூட இதே மாதிரி அலங்காரம் செய்யணும், நான் பார்த்து மகிழணும், அம்மா.''

''நான் நேத்து ராத்திரி சுப்பண்ணாவைச் சொப்பனத்தில் பார்த்தேன் அப்பா.''

''என்ன சொன்னான் அந்தப் பாவி?''

''அவரைப் பாவின்னு சொல்லாதேங்கோ அப்பா. அவர் சொன்னார்....''

''என்ன சொன்னான்?''

''இந்த சிவாசாரிய பரம்பரை நசித்துத் தொடர்பு இல்லாமல் போயிடக் கூடாது. அதனாலே அப்பா சொல்படி கல்யாணம் செய்துக்கோன்னு சொன்னார்.''

''அப்படியா!''

''கையடிச்சுச் சத்தியம் வாங்கிண்டார். நான் கல்யாணம் செய்துக்கறேன் அப்பா.''

''கௌரி!'' — அலறிவிட்டார் குருக்கள். அந்த மண்டபமே அந்த அலறலில் அதிர்ந்தது. அடுத்த நிமிடம் ''கௌரி! சுப்பண்ணா உன் கணவன். அவன்தான் என் மாப்பிள்ளை'' என்று அலற ஆரம்பித்தார்.

தன் பெண் கல்யாணம் செய்து கொள்வதாய்ச் சொன்னது அவருக்கு அதிர்ச்சியை உண்டாக்கி விட்டது.

இப்போது எல்லாம் கோபுர வாசற்படியில் குருக்கள் தேவஸேனாபதி உட்கார்ந்தபடி அடிக்கடி சொல்கிறார்: ''சுப்பண்ணாதான் கௌரியின் கணவன் தெரியுமோல்லியோ?''

பதினைந்து நாட்கள் ஸ்வாமி பூஜைக்கு என அவர் அழைத்து வந்த உமாபதிதான் இப்போது நிரந்தரக் குருக்கள் ஆகிவிட்டான்.

அவன் கையால்தான் இனி ஸ்வாமிக்குத் திருக்கல்யாணங்கள் நடைபெறப்போகின்றன.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

